உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில் :

ஸ்ரீமந் நடராஜப்பெருமான் திருவுருவம்



பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.

# அருள் பழுத்த கனிச்சுவை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்
கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்
சுவாமிகள் அவர்கள்**

இன்பங்கள் நிறைந்திருக்கும் இடத்திலெல்லாம் துன்பங்களும் இருக்கும். உலகில் உள்ள இன்பதுன்பங்களில் படாமல் உலகிற்கு வந்த நிலையையே - இந்தப் பிறவியையே துன்பம் என்று கண்டவர்கள் நம் அருளாளர்கள். பிறவியைக் 'கொடிய விஷ நோய்' என்று வருணிக்கிறார், ஸ்ரீகுமரகுருபரசுவாமிகள்.

உலகில் மக்கள் விஷநோயைத் தீர்க்க மூன்று வழிகள் கண்டுள்ளனர். ஒன்று, மணி. அது விஷம் நீக்கும் கல். அடுத்தது மந்திரம். மூன்றாவது பச்சிலை முதலிய மருந்துகள். இந்த மூன்றில் தீராத விஷ நோயை மணி ஒன்றே தீர்த்தது. முதலில் மணியே சென்மம் என்னும் விஷநோயைக் கூடத் தீர்த்து விடுகிறதே என்று வியந்து போற்றுகிறார்.

மீளா மணிமந்திரமருந் தாற்சென்ம வெவ்விடநோய்
வாளா மணிஒன்றி ஞல்மீண்டவா?

மணி மந்திர ஒளடதங்களில் சொல்லப் பெறும் மணி இந்த வேடிக்கையைச் செய்யவில்லை. இது வேறு மணி. அப்படியென்றுல், மக்கள் விலை கொடுத்து வாங்கி ஆதிக்கம் செலுத்தும் நீலம், பவளம், புஷ்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூர்யம், வைரம், கோமேதகம் என்னும் நவரத்தினங்களில் ஒருமணியோ என்ற ஐயம் வரும். அப்படியும் இல்லை; அந்தமணியை யாரும் விலைக்குப் பெற்று மேலாதிக்கம் செலுத்த முடியாது என்கிருர்.

"... ... ... .... அம்மணி பிறர்கொண்டு
ஆளா மணி."

விஷம் நீக்கும் மணியும் இல்லை; நவரத்தினங்களில் ஒன்று என்பதும் தவறு. ஒருவேளை இந்தப் பிறவி நீக்கும் மணி தெய்வலோக அதிசயங்களுள் ஒன்ருன சிந்தா மணியோ என்று நாம் நினைக்கின்ருேம். "சிந்தாமணிதான்; ஆனுல் தெய்வலோகத்தில் உள்ளதன்று; மண்ணுலகத்தில் வந்து எம்மையெல்லாம் ஆட்கொள்ளும் சிந்தாமணி" என்று மேலும் புதிர் போடுகிருர்.

'எமை ஆட்கொள் சிந்தாமணி"

சென்ம விஷநோயைத் தீர்க்கும் மணி மண்ணுலகத்தில் தான் உள்ளது என்றதும் நம் ஆர்வம் மேலும் பெருகுகிறது. அதுவும் சிந்தாமணி மண்ணுலகில் உள்ளது என்ருல் அது எங்கே உள்ளது என்று தெரிந்து கொள்ள வேட்கையால் உந்தப்படுகிருேம்.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நம்வேட்கையை மேலும் மேலும் தூண்டும் வகையில் 'பிறவி என்னும் விஷநோயைத் தீர்க்கும் அந்த மணியை மெய் வாய் கண் மூக்குச் செவி

என்னும் ஐம்பொறிகளையும் அடக்கிய பெரிய தவசிகள் சிரசின்மேல் சூளாமணியாக வைத்துப் போற்றுகிறார்கள்' என்கிறார்.

.... .... ... ... ''ஐந்த வித்தோர்

சூளாமணி''

என்னும் இக்குறிப்பு அந்த மணி நாம் நினைப்பது போன்ற பொருளன்று என்று உணர்த்திவிடுகிறது. அதற்குப் பிறகு தான் அந்த மணி ''குருநாதராகிய ஸ்ரீ மாசிலாமணி'' என்று அறிவிக்கிறார். அந்த மணிக்கு மிக்க சுடர் உண்டு. அந்தச் சுடர் பிற மணிகளில் உள்ள சுடர் போல மங்காது; மறையாது.

ஸ்ரீ மாசிலாமணி என்னும் குருநாதரே பிறவியை நீக்க வல்லவர் என்பது இப்பாடலின் கருத்து. பாடலின் முழு வடிவைக் காண்போம்.

''மீளா மணி, மந் திரமருந்தால் சென்ம வெவ்விட நோய்
வாளா மணிஒன்றி னால் மீண்டவா அம் மணி பிறர் கொண்டு
ஆளா மணிஎமை ஆட்கொள் சிந்தாமணி ஐந்தவித்தோர்
சூளா மணிமெய்ச் சுடர், மாசிலாமணி சூழ்ந்திடினே''.

மணி, மந்திர மருந்தால் மீளா வெவ்விடநோய், மாசிலாமணி சூழ்ந்திடின் மீண்டவா எனக் கூட்ட வேண்டும். குருவருள் சூழ்தலாவது நிரம்புதல். அவ்வாறு சூழினல்லது பிறவிநோய் நீங்காது என்பது குறிப்பு.

— சிவ சிவ



# சித்தாந்த சாத்திரங்கள்

## மு. அருணசலம்

### திருவுந்தியார்

திருவாசகத்தில் 14-ஆம் பதிகமாக அமைந்துள்ளது திருவுந்தியார். இது மிகைப்பாடலை நீக்கி 19- பாடல்களை உடையது. முழுமையும் இந்தப்பாடல் அமைப்பையும் யாப்பையும் அடிவரையறையையும் மகுடத்தையும் தழுவித்திருவியலூர் உய்யவந்த தேவநாயனுர் தம்முடைய சித்தாந்த சாத்திரமாகிய திருவுந்தியாரை அமைத்திருக்கிருர் என்பது வெளிப்படையாகத் தெரிந்த செய்தி. இந்த அமைப்பு இவ்விரு நூல்களுக்கும் உள்ள புற ஒற்றுமை. ஆனல் பொருள் அமைப்பில் அக ஒற்றுமை ஏதும் இல்லை. முழுமையும் வேற்றுமையே. மாணிக்கவாசகர் உந்தி பாடியபோது வீதியில் சென்று கொண்டிருந்த நிலையில் மகளிர் அதாவது பெண்குழந்தைகள் உந்தி விளையாட்டு ஆடிக் கொண்டிருந்ததைக் கண்டு அந்த விளையாட்டே பொருளாகத் தம்முடைய பிரபந்தத்தை விளையாட்டுப் பாடலாகவே பாடினுர். திருவாசகத்தின் பிற பதிகங்கள் போல இதுவும் ஒரு தோத்திரப் பதிகம் என்பதை நாம் மனத்திற் கொள்ளவேண்டும். பிற்காலத்தில் திருவாசகத் தோத்திரப்பதிகங்களுக்கு உட்கிடை என்று இருவகையாகப் பொருள் சொல்லியிருக்கிருர்கள். சாதாரணமாக எல்லா அச்சுப் பதிப்புகளிலும் இத்திருவுந்தியாரின் தலைப்பில் 'ஞான வெற்றி' என்ற குறிப்பு காணப்பெறும். அதாவது அருட்சக்தியினுடைய சாமர்த்தியம் என்பது இதற்கு விளக்கம். அகத்தியர் அருளியதிருவாசகத் திருவுள்ளக் கிடை என்ற பாடலானது,

ஞான வெற்றி யெனநவின் றனரே
திருந்தோ ணோக்கம் பிரபஞ்ச சுத்தி

என்று இதையே குறிப்பிடுகிறது. ஆனல் இப்பதிகத்தைப்படிக்கின்ற சாமானிய அன்பர்கள் இதை ஞான வெற்றி என்று உணர்ந்து கொள்வது கடினம். இதன் 19-பாடல்களிலும் சிவபெருமானுடைய பராக்கிரமத்தால் விளைந்த தூலமான வெற்றியே சொல்லப் பெற்றுள்ளது. முதல் 4- பாடல்களில் திரிபுர சம்

ஹாரம்; ஓரம்பே கொண்டிருந்தார்; அதுவும் மிகை; தேரின் அச்சு முறிந்தது: முப்புரம் அழிந்தது; அங்கிருந்த அன்பர் மூவரைப் பெருமான் காவல் கொண்டார்—என்று இப்பாடல்கள் கூறுகின்றன.

5-ம் பாடல் தொடங்கி 16 ஆம் பாடல்வரையில் 12 - பாடல்களில் தக்கயாக சம்ஹாரம் விரிவாகச்சொல்லப்படுகிறது. திருமால், அங்கி, புரந்தரன், வியாந்திரன், பகன், நாமகள், பிரமன், சோமன். மகத்து இயமான், முதலாக தக்கன் வரையில் யார் யாரை எவ்வாறு தண்டித்தார் என்பது சொல்லப்படுகிறது.

எஞ்சியுள்ள 3- பாடல்களில் உபமன்னியு முனிவருக்குப் பாற்கடல் ஈந்த செய்தியும், பிரமன் கபாலத்தைக்கிள்ளி ஏந்திய செய்தியும், இராவணனைத் தண்டித்த செய்தியும் சொல்லப்படுகின்றன. இங்குப் பாற்கடல் ஈந்தது ஒன்று நீங்கலாகப் பிற யாவும் பெருமான் மற்றவர்களைத் தண்டித்த செய்தியே. இவை கதைகள் ஆனமையால் மெய்ஞ்ஞான அனுபவம் இல்லாத சாமானிய அன்பர்கள் இவற்றை நன்ருக உணர்ந்து கொள்ள முடியும். இது இந்தப் பாடல்களில் அமைந்துள்ள அகத்தன்மை.

ஆனல் சாத்திரத் திருவுந்தியாரானது அனைத்திலும் வேறுபட்ட அக அமைப்புடையது: முதல் பாடல் தொடங்கி 45-ம் பாடல் இறுதியாக ஒவ்வொரு பாடலிலும் சிவானுபவத்திஞல் பெறத்தக்க மெய்ஞ்ஞானத்தையே ஆசிரியர் சொல்லிக் கொண்டு போகிருர்.

ந்த மெய்ஞ்ஞானம் எளிதில் உணர்வதன்று. அதுபற்றித்தான் திருமுறைகளை வேதம் (மறை) என்று சொல்லி வந்த நம் ஆன்ருேர் இச் சாத்திரத்தை வேதாந்தம் (மறை முடிவு), அதாவது உபநிடதம் என்று சொல்லியிருக்கிருர்கள். உபநிடதத்தின் சொல்லமைப்பும் பொருளமைப்பும் மிகச் சிறிய சொற்களால் மிகவும் சிறிய அடிகளால் பரஞானத்தையே சொல்லால் உணர்த்துகின்ற ஒரு தன்மை; அந்தத் தன்மையையே இச் சிறு நூலிலும் நாம் காண்கிருேம்.

முதல் பாடலில் ஆசிரியர் தம்முடைய குரு என்று ஒருவரைப் பெயர் கூறிச் சுட்டவில்லை. அப்பொருள் அறிவரிது; அது சகளமாய் வந்தது என்று மட்டும் சுட்டியதனல் இவருக்குச் சிவபெருமானே அருளாசிரியராக வந்தார் என்ற கருத்தைத் தருகிறது. இனி, சிறப்புப் பாயிரம் போல அல்லது நூற்பயன் கூறுவது போல அமைந்துள்ள 45 - ம் பாடலை நிறுத்தி, 44 - ம் பாடல் வரையில் நாம் பார்ப்போமானுல் அப்பாடலில் ஆசிரியர் ஒரு முடிப்பைக் காட்டுகிருர்; இப் பாடலில்

'சகளமாய் வந்தது அப்பொருள்' என்று சொல்லியதனோடு கூட 'மடவாளுடனே வாழ்க என்றும்' என்று வாழ்த்துதலால் வந்த பொருள் அருளோடு கூடிய சிவம் என்பது தெளிவாகின்றது. இது நன்றாக மனத்தில் கொள்ளத்தக்க கருத்து.

இதனோடு கூட நூற்பயன் கூறும் பாடலையும் சேர்த்து நோக்கும் போது ஆசிரியர் தம்மைப் படர்க்கையில் வைத்து நூற்பயன் கூறக் காண்கிறோம். "உய்ய வந்தான் உரை உந்திபற' என்பது காண்க. இதன் முதல் வரியில் 'வையம் முழுதும் மலக் கயம் கண்டிடும்... உரை' என்று சொல்வதால் (மலக்கயம் - மல நாசம்) தாம் கூறுகின்ற இந்த உரையாகிய நூல் (ஞானசாத் திரம்) உலகத்தார் அனைவருக்கும் பாசநீக்கம் செய்து அதன் மேல் மெய்ப் பொருளை உணர்த்தும் என்று அவர் உறுதியாகக் கூறு கிறார் என்று கருத வேண்டும். எனவேஇவர் இந்த நூலைச் செய் தது சிவபெருமானுடைய திரு வுள்ளக் குறிப்பின் படி என்று நாம் கொள்வது பொருத்த மாகும்.

இனி இவ்வாறு அமைந்த 44 பாடல்களுக்குள்ளும், எல்லாப் பாடல்களிலும் ஆசிரியர் சொல் லுகின்ற சொற்களும் தொடர் களும் பலசமயம், குழூஉக் குறி போல அமைந்திருக்கக் காண் கிறோம். ஆனால், ஒவ்வொரு தொடருக்கும் பாடலுக்கும் உள்ள பொருளை ஒரு தொகுப் பாக நாம் பார்க்கும் போது இந்த ஞானவானுடைய கருத்து என நமக்கு மிகவும் தெளிவாகத் தெரிய வருகிறது. அப்போது இது வெறும் குழூஉக் குறியல்ல. உண்மையனுபவத்தைச் சுருங்கிய சொற்களால் சொல்ல வேண்டு மானால் இப்படிப் பட்ட சொற்க ளால் தான் சொல்ல முடியும் என நாம் உணர்கிறோம். இந்தப் பாடல்கள் பிற சாத்திரங்கள் போல் படித்துப் பொருள் தெரிந்து கொண்டு பிறகு விட்டு விடுகின்ற செய்யுட்கள் அல்ல. பாடல்கூறும் பொருள் நன்றாக மனத்தில் தங்கிய பிறகு அதைச் சிந்தித்துக் கொண்டே பாடலை மீண்டும் மீண்டும் பசு அசை போடுவதைப் போல சொல்லிக் கொண்டே வந்தால் பாடலும் இனிக்கும். பாடல் அநுபவமும் பெருகும். அத்தகையதொரு மந்திர சாஸ்திரம் திருவுந்தியார்.

இவ்வாராய்ச்சிக் குறிப்பில் பொருள் முழுமையும் விளக்கு வது நோக்கமல்ல என்றாலும் நூலின் போக்கை உணர்த்து வதற்குச் சில குறிப்புகளை மாத் திரம் கீழே தருகிறோம். முதல் 6-கலித்தாழிசைகளில் உய்ய வந்த தேவர் தம்முடைய குருமூர்த்தி யிடம் பெற்ற ஞான உபதேசத்

தையும் அதன் பயனையும் தொகுத்துக் கூறுகிறார். பின் வரும் பாடல்கள் அனைத்திலும் அந்த உபதேசத்தைப் பல வகை யாக வகுத்துக் கூறத் தொடங்கு கிறார்.

ஏழாம் பாட்டு முதல் பதினே ராம் பாட்டு வரை முற் கூறிய உபதேசம் அல்லது சாதனத்தின் வகை. இங்கு ஆதார யோகம், நிராதார யோகம், இந்த இரண் டையும் கடந்த மீதான நிலை, அந்த நிலையில் நிற்றல் ஆகிய தன்மைகளை உணர்த்துகிறார்.

19, 20 - பாட்டுக்கள் இன்புறு நிலையை உணர்த்துகின்றன. அதாவது ஆன்மா தான் அழியா மல் தனது முனைப்பு அழிந்து பேரருளில் அடங்கி நிற்கின்ற அதீத நிலை.

21, 22-ம் பாட்டுக்கள் இரண் டும் இன்புறு நிலை கைகூடுவதற்கு உரிய உபாயங்களான தத்துவ உணர்வையும், வாசியோகத்தை யும் (மூச்சைக் கட்டுப்படுத்துதல்) சொல்லி இவை உபாயங்களே யன்றி இவை முடிவல்ல என்று உணர்த்துகின்றன.

அடுத்த 6-பாட்டுகள் 23முதல் 28 வரை- பாசநீக்கமும் வீடு பேறும் சொல்லுகின்றன. இவை இரண்டும் முன்னமே கூறிய உப தேசத்தின் பயன்கள். 3பாடல்கள் பாச நீக்கத்தையும் 3பாடல்கள் சிவப்பேற்றையுமு உணர்த்துகின் றன.

அடுத்த மூன்று பாட்டுக்கள் (29, 30, 31) பரமுத்தியின் இயல்பையும், தான் கெட்டுச் சிவ நெறியில் நிற்கும்போது கைகூடும் சிவப்பேற்றையும் உணர்த்துகின் றன.

32 -முதல் 38வரை 7பாடல்கள் அணைந்தோர் தன்மை உரைப்பன

பின் 39 40 ஆகி யஇருபாடல்கள் கள் சைவசித்தாந்தத்தில் பர முத்தியின் இயல்பு என்ன என்ப தைத் தெளிவு படுத்துகின்றன.

41 42, 43 ஆகிய பாடல்கள் சிவநெறிக்கு அடிப்படையாக உள்ள அறிவு நிலையையும் உய்யும் நெறியையும் காட்டுகின்றன.

44, 45ம் பாடல்கள் ஆசாரியன் வாழ்த்தாகவும் நூற்பயனாகவும் அமைந்துள்ளன.

இவ்வாறு இந்நூற்கருத்தைச் சொல்லியதனால் மட்டும் பாசுரங் களின் கருத்து நமக்கு விளங்கிய தாகப் பொருளன்று. அறிஞர்க ளுக்குப் பாடல்களின் பொருள் விளங்குவதற்கு ஆதாரமாக முன் உரையெழுதிய பரமஉபகாரிகளு டைய விளக்கம். ஆசிரியர் எப் போதும் அநுபவநிலையில் நின்று பேசுவதால் ஒன்றை விளக்கிச் சொல்லும் அவசியம் அவர்க்கு இல்லை. சிலசமயங்களில் அநுபவமே சொல்லாகிறது. வேறு சமயங்களில் அதுவே உவமையாகிறது. உவமைகூட அல்ல முற்றுருவகம். உருவ கத்தை விளக்கிக் காட்டும் எண்ணம் அவருக்கு வரப் போவ தில்லை. நம்முடைய நிலையை நன்கு உணர்ந்த உரையாசிரியப் பெருமக்களே இவற்றை நமக்கு

விளக்கிக் காட்டுகிறார்கள். இது நமக்குக் கிடைத்த ஒரு பெரும் பேறு. இவர்களும் அநுபூதிமான்கள் என்பதில் சந்தேகமில்லை. இவர்களும் பாடல்தரும் சொல் அழகிலும் பொருள் அநுபவத்திலும் தோய்ந்து நின்று விட்டார்களேயானால் நாமும் பொருள் உணர வழியில்லை. ஆதலால் நமக்கு விளக்கியளிக்கின்ற இவர்கள் மூல ஆசிரியரைப் போலவே நமது முழுப் போற்றுதலுக்கும் உரியவர்கள்.

இப்போது திருவாசகத் திருவுந்தியாருக்கும் சாத்திரத்திருவுந்தியாருக்கும் உள்ள அகவேற்றுமை என்று நாம் தொடக்கத்தில் கூறியது நன்கு விளங்கும். முந்தியது பராக்கிரமச் செயல்களைக் கூறுவது; அதுகதை. அதை நாம் நன்கு விளங்கிக்கொள்ள முடியும் - பிந்தியது ஆத்மாநுபவம். ஆத்மாநுபவத்தைப் பெற்றவர்கள்தான் உணர முடியும். மற்றவர்கள் சொற்பொருளாக உணரலாமேயன்றி அநுபவப் பொருளாக உணர இயலாது. ஆயினும் மிகவும் அழகான தொடர்களையும் அடிகளையும் கொண்ட இச்சிறு நூலை ஒரு சாத்திரமாக வகுத்த நம் ஆன்றோர் நம்முடைய பெரும் போற்றுதலுக்கு உரியவர்கள். பாடல்களைப்படிக்கப் படிக்க நாவுக்கு இனிக்கும் என்பது முழுமையும் உண்மை.

ஓர் ஒரு பாடலை மாத்திரம் உதாரணமாக்காட்டி அப்பாற் செல்வோம்.

பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு

என்பது திருக்குறள் - நன்கு தெரிந்தது. அக்குறளின் தொடர்களையே இவர் வேறு விதமாக அமைத்து நமக்குப் பொருள் தருகிறார்.

பற்றை அறுப்பதோர் பற்றினை பற்றில் - அப்
பற்றை அறுப்பரென் றுந்தீபற
பாவிக்க வாராரென் றுந்தீபற

தத்துவங்களாகிய பாசப்பற்றை அறுத்தற்குத் துணையாக நிற்கவல்ல திருவருளைப்பற்றினால் அத்திருவருள் சார்பாய்ப் பதி வெளிப்பட்டு நிற்கும். அப்பதியானது யான் எனது என்னும் அகப்பற்றை அறுத்துத் திருவடி எனப்படும் மீதானத்தில் வைக்கும். இந்த நெறியினால் இறைவனை அடையலாமேயன்றி வேறு எவ்வகை பாவனையினாலும் அவன் அடையத்தக்கவன் அல்லன் என்பது பொருள்.

இப்பாடலில் வருகின்ற முதல் பற்று தத்துவங்களாகிய பாசப் பற்று. இரண்டாவது பற்று பற்றத்தக்க சார்பாகிய திருவருள். மூன்றாவது பற்று யானெனது என்னும் செருக்காகிய அகப் பற்று. எனவே இந்தப் பாடலால் ஆசிரியருடைய உணர்த்து முறைமை எத்தகையது என்பதை உணரலாம்.

# வாழ்த்தும் வணக்கமும்

பசிப்பிணி மருத்துவர்: மு. ஆ. அருணசல முதலியார்,
உறையூர்.

1. நெஞ்சீரம் மிக்கநன் நெறிநிற்கும் சந்நிதானம்
துஞ்சலிலா அடியவரும் தொடர்ந்துசிவ பதம்பரவி
வஞ்சமிலா வழிபாடே வழித்துணையாய்த் திருக்கயிலை
தஞ்சமென அஞ்சலிக்கத் தலைப்பட்டார் பெரிதாமே.

2. பெரியதோர் நற்செயலைப் பின்தொடர்ந்து அடியவர்கள்
அரியதோர் வழிப்பயணம் அன்புதிர்த்துத் திருக்கயிலை
பரிவோடும் பண்போடும் பகலிரவாய்ச் சென்றங்கே
துரியநிலை அதுகடந்த தோன்றலரைக் கண்டார்காண்.

3. கண்டநற் றிருக்கயிலைக் காட்சிக்கு அற்புதமே
கொண்டதோர் கருத்தாகிக் கோதகன்ற சிந்தையராய்ப்
பண்டுநம் நாவரசுப் பாதமது பட்டமண்ணில்
தண்ணார்ந்த அன்போடு தலைப்பட்டார் அடியவர்கள்.

4. அடியவர்கள், பலர்கூடி ஆத்மபரி பாகமதாய்ப்
படிகடந்த பான்மையொடு பளிங்குக் கயிலாயமலை
முடிபடர்ந்த சிகரமதை முக்காலம் தரிசித்து
மிடிமையொடு வலம்வந்து மென்மலர்த்தாள் போற்றினரே;

5. போற்றிப் புகழ்ந்தெழுந்து புண்ணிய பூமியிலே
ஆற்றகிலா ஆனந்தம், அகங்குளிர அஞ்சலித்துச்
செற்றமனச், சித்தரெனச் சிவமொலிக்கும் நாவினராய்ப்
பற்றெழிந்த தன்மையது பாலிக்கும் பரவசமே.

6. பரவசத்தே தாம்மூழ்கிப் பக்குவமே உடனாகச்
சிரந்தாழ் கயிலைமலை சிறைப்பட்ட நெஞ்சகமாய்
அரன்நாமம் ஐந்தினுக்கும் அடைக்கலம் புகுந்தவராய்க்
கரங்கூப்பி வழிபடுநற் காட்சிதனைக் கண்டார் காண்.

7. காண்பதுவும், களிப்பதுவும், கடலனைய ஆனந்தம்
பூண்டதோர் உடலுயிரைப் பொருட்படுத்தா நிலையாகி
ஆண்டவனே கயிலாயா! அருட்கடலே! அப்பாவோ!
வேண்டுதலே கடமையென விதிர்விதிர்த்து அஞ்சலித்தார்;

8. அஞ்சுவிதப் பூதங்கள் அவையடங்கும் பான்மையராய்ப்
பஞ்சையென வழிநடந்து பக்குவமே உடன்சார
விஞ்சுதலே விடையாகி வினையகல வேட்கையொடு
தஞ்சமெனக் கயிலைமலை சரணடைந்தார் தாள்சரணம்.

# களந்தைக் கலித்துறை அந்தாதி

தக்கது சொல்லிற் பகையாய் முடியும் தகாதுரைத்தால்
மிக்கது பொய்யென மாந்த ருரைப்பரவ் வீணிலெனைப்
புக்க விடாதுநின் பொன்னடி பாடும் புலமருள்வாய்
திக்கது போற்றுங் களந்தைச் சுகலிங்கச் சிரியனே. 52

சிரியன் தென்களந் தைச்சுக லிங்கர் திருச்சிலம்பிற்
கூரிய வேல்விழி மங்கைநல்லார்மதங் கொள்களிற்றை
ஏரியற் கன்மரைத் தென்மேல் விடுத்ததை யென்னினகம்
தேரிய மேலவர் செய்கையின் மேலென்று தேறினனே. 53

தேரிய தென்களந் தைச்சுக லிங்கர் திருச்சிலம்பின்
மாறிய வண்டினங் காளே டெழுதிநீர் வாசித்தது
வீறிய கொங்கையின் பார முடலிடை மேற்கணக்கை
கூறு விராதலிற் கூழைவருத் தையென்று கொண்டனரே. 54

கொண்டல் வரவினைப் பைங்கூழ் விரும்புங் குளிர்மதியை
விண்டலத் தார்ந்த சகோரம் விரும்பிடு மேன்மையைப்போற்
தண்டலை சூழ்களந் தைச்சுக லிங்கநின் தன்னருளைக்
கண்டிடும் ஆசையின் நின்றனன் என்றுநீ காட்டுவதே. 55

காட்டிக் கரத்தினை வாயினைப் பல்லினைக் கண்ணினையுங்
காட்டித் தனத்தினை யன்ன நடையினைக் காமரசங்
காட்டிப் பணம்பறி மாயப் பரத்தையர் கையிலெனைக்
காட்டிக் கொடான்சுக நாதன் களந்தையைக் காத்தவனே 56

தவம்புரி சத்த இருடியர் முன்வின் தலத்திலுறை
நவங்கொள் சிரகத்தில் மேற்கதிவேண்டு நறையிதழிச்
சிவங்கொ ளிலிங்க மமைத்துநல் பூசைசெய் தென்களந்தை
அவங்கெட விர்க்குஞ் சுகலிங்க னெற்கோ ரருந்துணையே 57

துணையோடு போந்தமைந் தார்நம ரென்று துயரகன்றோம்
பிணையோ டிருவர்முன் போயின ரேதென் புரிகளந்தை
இணையில் சுகலிங்கர் நாடனைக் கண்டன னென்னயலே
பணை நெடுந் தோண்பயி லென்னைகொ லன்னை பகர்ந்ததுவே; 58

பகனெனுஞ் சூரனை வீட்டி யிறகைப் பறித்துமதிக்
கிகலெனுஞ் செஞ்சடை மீதுதரித்த இறையவயான்
சகமதிற் செல்வமுன் வாடி யிருப்பது தக்கதுவோ
திகழ்களந் தாபுரி மேவுஞ் சுகலிங்க செப்புவையே, 59

## நடுவெழுத்தலங்காரம்

செப்பிய சாமளந் தேருருள் பூமுகை தேமலர்த்தாள்
ஒப்பில் குழவிமுன் காவிரி முன்பி னொழித்துநடுத்
தப்பி லெழுத்தி னறுபெய ருன்னினுத் தளர்வகன்றேன்
திப்பிய மேதருந் தென்களந் தாபுரிச் சேர்ந்தவன்றே: 60

அன்றே உடல்பொருள் ஆவியு நின்றனக் காக்கிவிட்டேன்;
நன்றே புரியினுந் தீதே விளைக்கினும் நல்லதுவே
சென்றே அரியயன் தேடியுங் காணாச் செறிகனலின்
குன்றே களந்தைச் சுகலிங்க தேவ குருபரனே. 61

பரந்திடு வெஞ்சரஞ் சுட்டிடு மென்று பயந்துவிண்ணோர்
நிரந்தர ராய்ப்புவி மீதடி வைத்திலர் நீள்களந்தைக்
கரந்தை யணிசுக லிங்கரைப் போற்றாக் கசடரைநேர்
சுரந்தனில் எப்படிச் சென்றனள் மின்கொடி துண்ணெனவே, 62

---

| | | |
|---|---|---|
| 1. சாமளம் — பசுமை | | |
| தேருருள் — சகடு | | நடுவெழுத்தைச்சேர்க்க |
| பூமுகை — கலிகை | | |
| தேமலர் — கொங்கு | | வருபெயர் சுகலிங்கன் |
| குழவி — மகவு | | |
| காவிரி — பொன்னி | | |



# "குற்றமில்லை என்மேல்"



சபா. பரமசிவம், திருவிடைமருதூர்

''குணம்நாடிக் குற்றமும் நாடி
யவற்றுள்
மிகைநாடி மிக்க கொளல்''

—என்பது குறள். இதற்கு உரை எழுதிய பரிமேலழகர் குணமேயுடையார் உலகத்து அரியர் என்கிறார். அவ்வாறாயின் குற்றமுடையார் பலராவர் என அறிகிறோம். உலகம் குற்றமுடையதா? மக்கள் குற்றமுடையவரா? மக்களின்றி உலகம் ஏது? குற்றம் மக்களுக்கு ஆகுமேயன்றி மாநிலத்துக்கு ஆகா. 'எவ்வழி நல்லவர் ஆடவர் அவ்வழி நல்லை வாழிய நிலனே' என்கிறது புறநானூறு.

உலகில் உயிர்ப் பொருள்கள் பலவுள்ளன. அவை ஓரறிவு முதல் ஆறறிவு வரை. ஐந்து அறிவு வரை வகுக்கப்பட்ட உயிர்கள் மனித சமுதாயத்திற்கு உதவி செய்கின்றன. மரங்கள், மண்புழு மாடு முதலியவாகிய பலவும் பகுத்தறிவற்றன. இருப்பினும் அவை தாமும் வளர்ந்து, வாழ்ந்து மக்கட் சமுதாயத்தை வாழ்விக்கின்றன. அவைகளிடம் குற்றங்கள் இல்லை. குணங்களே உள்ளன. ஆனால் ஆறறிவு படைத்த மனித இனத்திடம் மட்டுமே குற்றம் என்ற சொல் தோன்றும். அவர்களே 'குற்றம் செய்தல் எனக்கியல்பு குணமாக் கொள்ளல் ஏனையோர்க் கழகு' என்று அருளுரையை மாற்றித் தனது உரையாக்கி வாழ்கின்றனர். வளர்கின்றனர். இறுதியில் மாள்கின்றனர்.

மனித இனம் அறிவினால், பிறிதின் நோயைத் தன் நோயாக, ஏற்பதில்லை, 'தீ தொரீஇ நன்றின் பால் உய்ப்பதில்லை'. குற்றங்கள் செய்வதையே வாழ்வாகக் கொள்கின்றது. குற்றம் நீதி மன்றம் சென்றாலும் நிதி குறுக்கிட்டு மாற்ற முயல்கிறது. குற்றவியல் பிரிவையே குற்றமுள்ளதாக்குகிறது தனது நாவன்மையால்.

நாட்டு மக்களிடை எங்குப் பார்த்தாலும் நல்லஎண்ணங்கள், நல்ல சொற்கள், நல்ல செயல்கள்

அருகி வருகின்றன. யாவரிடத்தும் அன்பு காட்டுதல், சகிப்புத் தன்மை, விட்டுக் கொடுக்கும் மனப்பான்மை ஆகியவை எங்கேயோ ஒளிந்து கொண்டன. அதற்கு மாறாக வேற்றுமைகள், பிணக்குகள், பொய், களவு, காமம் முதலியவை நிலவுகின்றன. இதை மறுப்பதற்குமில்லை மறைப்பதற்குமில்லை. உள்ளங்கை நெல்லிக்கனியாகவுள்ளது.

'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்ற எண்ணம் பீடு நடை போடுகின்றது. இதற்கு அறிவும் தேவையில்லை. ஆய்வும் தேவையில்லை. ஆண்மை (வலிமை) என்ற ஒன்று இருந்தால் போதும். 'தடி எடுத்தவன் தண்டல்காரன்' என்ற நிலைமைக்கு நாடு வந்து கொண்டிருக்கின்றது.

'தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண வேண்டும்' என்பது அருளுரை. அருளுரைக்கும், அறவுரைக்கும் இது காலமன்று. உணர்வோர் குறைவாகவும், உணர்த்துவோர் பலராகவும் இருக்கின்றனர். உணர்த்துவோர் என்றால் யார்? அவர் தகுதி யாது? அவர் குற்றங்கள் நீங்கியவராக இருக்க வேண்டாமா? என்பன யாவும் பழங்கதைகள் ஆகிவிட்டன.

செல்வத்தை எவ்வழியிலும் ஈட்ட வேண்டும். இன்பத்தில் திளைக்க வேண்டும். தனது உரைகளே உரைகள். தனது வழியே நல்வழி. தனது உரையை மாற்றினும், மறுப்பினும் அவர்க்கு வாழ்வில்லை. அவர்களை அழிப்போம். ஆண்டவனும் நம்பக்கமே துணையாவான். 'அஞ்சுவது யாதொன்றுமில்லை' என்ற நெறியே பல்கி வருகிறது.

''அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்
பூரியார் கண்ணும் உள''

- என்ற வள்ளுவர் வாய்மொழி வலிமை இழக்கிறது. வாழ்வியலுக்கு ஒவ்வாததோ என்ற அச்சம் ஏற்படுகின்றது.

''எதுகுற்றம், எது உண்மை எப்படி வாழ்வை அமைத்துக் கொள்ள வேண்டும்'' என்றெல்லாம் நடுவுநிலைமையோடு நல்ல உள்ளங்களோடு ஆராய்கின்றவர்களுக்குத் தெளிவு ஏற்படுவதில்லை. இவ்வுலகில் வாழ்வதா? வீழ்வதா? என்ற பிரச்சனையில் முடிவு காண முடியவில்லை பொழுது புலர்ந்து கண் உறங்குவதற்குள் பொருளாதாரத்தில் எத்தனை ஏற்ற இறக்கங்கள். எதிர்கால வாழ்வு பற்றிய பெரும் புயல்கள், மாடுமனை மக்கள் சுற்றம் என்ற பந்த பாசங்கள் ஆகியவை குறுக்கிடுகின்றன. இவை தேவைதானா? மண்ணுலகில் பிறந்து மக்களாய்

வாழ்வது சிறந்த வாழ்வா? என்றெல்லாம் சிந்திக்க வேண்டியவர்களாகின்றோம்.

பொன்னும், பொருளும், போகமும் வாழ்வில் நிலையானவையா? அல்ல என்பதை மனம் அறிகின்றது. பிறர்க்கும் அறிவுறுத்துகின்றது. ஆனால் அம் மனம் நல்வழியை நாடுவதில்லை.

பிறப்பதும், பிறந்தபின் இடையறாத இன்பத்தில் திளைப்பதும் மட்டுமே உலக வாழ்வு என்றால் அவ்வாழ்வை யாரேனும் வெறுப்பரோ! பிறவிகள் பலப்பல வேண்டுமென்போம்:

தாய் உதிரத்தில் பலகட்டங்களில் பிழைக்கின்றோம். மகளிரின் நயனக் கொள்ளையில் மனத்தைச் செலுத்துகின்றோம். உலகமாகிய பெரும்பரப்பில் மத்தக்களிறென்னும் அவாவிடைப் பிழைக்கின்றோம். கல்வி யென்னும் பல்கடல் பிழைத்தும், செல்வம் என்னும் அல்லலில் பிழைத்தும். நல்குரவு என்னும் தொல்விடம் பிழைத்தும் தெய்வம் என்பதோர் தெளிவுக்கு வருகிறோம் என்கிறார் மணிவாசகர்.

இத்தகைய துயர்க்கடலைக்கண்ட பின்னரேனும் தெய்வநெறிக்கு வருவோமா? என்றால் இல்லை. பொருட் செல்வத்தில் செல்லும் மனம் அருட்செல்வத்துக்குச் செல்வதில்லை. அருள் நெறிக்கு வருவதில்லை. அருளுரைகளை ஏற்பதில்லை. அருளாளர்களைக் காண்பதில்லை: அருள் நூல்களில் அறிவு செலுத்துவதுமில்லை.

மண்ணுலகில் வாழ்கின்ற மக்கள் அறிவின்வழி அருளாளர் நெறியில் விடுதலைபெறவேண்டும். வீடுபெற வேண்டும் என்று சிந்தித்துச் செயலாற்றுவதே இன்றைய தேவையும், சிறப்பும் ஆகும். இதற்கு வழிதான் என்னே! அன்பு உள்ளத்தோடு அருள் நெறி ஓம்ப வேண்டும், பிறர்துயர் களைய வேண்டும். இறைவனை இடையறாது நினைந்து வாழ்வில் வளம்பெறவேண்டும்.

எங்கேனு மிருந்து அடியேன் உனைநினைத்தால்
அங்கேவந் தென்னொடு உடனாகி நின்றருளி
இங்கேஎன் வினையை அறுத்திட் டெனையாளுங்
கங்கா நாயகனே கழிப்பாலை மேயானே

—என்ற சுந்தரர் அருளுரையைப் போற்றவேண்டும். ஆன்மீக நெறிக்கு அடிஎடுத்து வைக்க வேண்டும.

நித்தலும் நியமஞ் செய்துநீர் மலர்தூவிச்
சித்தம் ஒன்ற வல்லார்க் கருளுஞ்சிவன்

என்ற சம்பந்தர் உரையேற்று மனத்தைச் செயல்படுத்த வேண்டும். சென்றவிடத்தால் செல

விடாது தடுக்கவேண்டும்; மனமே குற்றங்களுக்குக் காரணமாகின்றது.''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்'' என்கிறார் வள்ளுவரும்,

திருநாவுக்கரசர் திருவங்கமாலையில்
நெஞ்சே நீ நினையாய்!
நிமிர்புன்சடை நின்மலனை
மஞ்சாடும் மலைமங்கை மணாளனை
நெஞ்சே! நீ நினையாய்.
என்று நெஞ்சைப் பார்த்து அறிவுறுத்துகிறார்.

''சிவனென்னும் ஓசையல்லது
அறையோ உலகில்
திருநின்ற செம்மை உளதோ''

எனவே மக்களாகிய நாம் மனத்தை ஒருநெறிப்படுத்திச் சிவனது நாமங்களை எடுத்துச் சொல்லி வழிபாடாற்றலே பிறவாப் பெருநெறிக்கு வழி செய்யும். அப்பெருநெறியே உயிர்க்குத் துணைசெய்வதும் ஆகும்.

''நெஞ்சமே! நீ இரவு பகல் ஆகிய எப்பொழுதும் இறைவனை வாழ்த்து. பிழைத்தனவெல்லாம் பொறுத்தருள் செய்ய வேண்டுமென்றுகேள். பெரியவனே! கண்டத்தில் கறுப்பை உடையவனே; அழகும் தலைமைத் தன்மையுடைய ஆரூர்ப்பெருமானே! என்றெல்லாம் வாய்விட்டு அழைத்து அலறு. அழைத்து அலறிப் பாது காப்புக் கேட்டால் தருவான்; அது மட்டுமல்ல; பிறவிப் பிணியை நீக்குவான், இழைத்த நாளெல்லை கடக்கச் செய்வான்'' என்று நெஞ்சைப் பார்த்துக் கூறுகின்றார் நம் சமயத் தமிழ் வேந்தராம் திருநாவுக்கரசர்.

இழைத்த நாளெல்லை
கடப்பதென்றால்
இரவினோடு நண்பகலும்
ஏத்திவாழ்த்தி
பிழைத்த தெலாம்பொறுத் தருள்
செய் பெரியோய் என்றும்
பிஞ்ஞகனே! மைஞ்ஞவிலும்
கண்டா வென்றும
அழைத்தலறி அடியேனுன் அரணங்
கண்டாய்
அணியாரூர் இடங்கொண்ட
அழகா வென்றும்
குழற்சடை யெங்கோ னென்றுங்
கூறு நெஞ்சே
குற்றமில்லை என்மேல் நான்
கூறினேனே
என்கிறது திருத்தாண்டகம்.

கூறவேண்டுமென்று நெஞ்சே! உனக்குக் கட்டளையிடுகின்றேன். நீ கூறவில்லையென்றால் குற்றமில்லையென்மேல் என்கிறார் நாவரசர்.

நெஞ்சைப் பார்த்துச் சொல்வதில் எத்தனை அழகு பாருங்கள்! நெஞ்சே! நீ செய்யும் பிழைக்கு நான் பொறுப்பாளியல்ல. இருப்பினும் என்கடமை உனக்கு உணர்த்துவது .அதுவுங்காலங்கட

வாது முன்னமேயே கூறினேன். கேட்கவில்லையென்றால் குற்ற மில்லை என்மேல்.

இன்றைய உலகியலுக்கும், அரு ளியலுக்கும ஏற்ற தலைப்பு திருநா வுக்கரசா திருத்தாண்டகத்திலி ருந்து கிடைக்கப்பெற்றதென்றும அருளுரைகள் என்றுமே நிலைத்து வாழ்வன. என்பதில் ஐய முண்டோ? அவர் தாண்டக வேந்தரல்லவா!.

'முன்னோர் மொழிபொருளைப் பொன்னேபோல்' போற்றிப் பிறவாப் பெருநெறி பெறுவோம்.

வாழ்க நம் சைவம்! வளர்க நம் அருள்நெறி.





# ஆலயப் பூஜை படிக்காசு நிதிக்கு நன்கொடை அளித்த அன்பர்கள் விபரம்

| | | | |
|---|---|---|---|
| 2—11—82 வரை கூடுதல்— | | | ரூ. 14,586-10 |
| 1. | திரு. | சு. சுந்தரசாமி. ஆவல்சின்னாம்பாளையம் | 10-00 |
| 2. | திரு. | A K. அனந்த செட்டியார், சித்தூர் | 10-00 |
| 3. | திரு | S R வேங்கடராமா, சென்னை | 5.00 |
| 4. | திரு. | D S. வெங்கிடுசாமிக் கவுண்டர், தளாப்பட்டி | 5-00 |
| 5. | திரு. | B இராமசாமிக் கவுண்டர் (இராமு) ,, | 5-00 |
| 6. | திரு | கா. பழனிக் கவுண்டர், வீரல்பட்டி | 5-00 |
| 7. | திரு | K. சென்னியப்பக் கவுண்டர், ,, | 5-00 |
| 8. | திரு. | K சண்முகக் கவுண்டர், ,, | 5-00 |
| 9. | திரு. | சென்னியப்பக் கவுண்டர், ,, | 5-00 |
| 10. | திரு. | இரா. சண்முகவேல், கொன்னூப்பாளையம் | 5-00 |
| 11. | திரு | P. K. சுப்பிரமணியம், பொள்ளாச்சி | 5-00 |
| 12 | திரு. | P சிற்பி பாலசுப்பிரமணியம், ,, | 5-00 |
| 13 | திரு. | A S. நடராசன், கணியூர் | 5-00 |
| 14 | திரு. | அ. இராமசாமிக் கவுண்டர், ஆத்துப்பொள்ளாச்சி | 5-00 |
| 15. | திரு | துர்க்காகுடில், அப்பு கும்பகோணம் | 5-00 |
| 16. | | காமாட்சி மாதர் சங்கம் P. கனகமீனாம்பாள், திருவிடைமருதூர். | 41-00 |
| 1—12—82 வரை கூடுதல்— | | | 14,712-10 |

************************

# திருமுடியும் தினைப்புனமும்

************************

## கி. வா. ஜகந்நாதன்.

தியாகேசப் பெருமானுடைய திருமுடியைத் தரிசித்து ஒரு கற்பனையைச் செய்கிறார் குமரகுருபரர்.

முதலில் திருவாரூரின் வளத்தைச் சொல்கிறார். அந்நகரில் எங்கும் பூம்பொழில்கள் வளர்ந்து ஓங்கி நிற்கின்றன. இடையிடையே மிக ஓங்கி நிற்கின்றன தென்னைமரங்கள். அவற்றில் குலைகுலையாகச் செவ்விளநீர் இருக்கின்றன. பூம்பொழிலாகிய பெண்ணுக்கு அந்த இளநீர்கள் நகில்களைப் படைத்திருப்பது போலத் தோற்றம் அளிக்கின்றன. மாதர் நகில்களுக்கு இளநீரை உவமையாக்குவது மரபு.

''கொங்கை இளநீரால்''
என்பது நளவெண்பா.

கமலையாகிய திருவாரூரில் பூம்பொழிலில் தென்னமரங்களில் குலைகுலையாக இருக்கும் இளநீரை இவ்வாறு வருணிக்கிறார் முனிவர்.

குலைவைத்த செவ்விள நீர்குளிர் பூம்பொழிற்
கொம்புக்கு இன்ப
முலைவைத்தது ஒக்கும் கமலேசர்.

இப்போது தியாகேசர் திருமுடியில் உள்ளவற்றைப் பார்க்கிறார்; அங்கே இறைவன் ஊனொழிந்து பல் மட்டும் உள்ள கபாலத்தை அணிந்திருக்கிறார். கங்காதேவியும் அங்கே இருக்கிறாள். பிறைச் சந்திரனும் இருக்கிறது; இவற்றையெல்லாம் ஒருசேரப் பார்க்கிறார். இவற்றையெல்லாம் இணைத்து ஒரு கற்பனை பண்ணுகிறார்.

குறிஞ்சிநிலத்தில் உள்ள கன்னிப்பெண்கள் தினைப் புனத்தில் இருந்து காவல் செய்வார்கள். கிளியும் குருவியும் தினையைக் கவர வந்தால் கவணில் கல்லை வைத்து வீசி அவற்றை ஓட்டுவார்கள். அந்தத்தினைப் புனத்தைப் போல இறைவன் சடாமுடி இருக்கிறதாம்.

அவனுடைய சடாமுடி பல் தோன்றக் கிடக்கும் வெண்டலையாகிய தசையொழிந்த என்புத்

தலையை வைத்த தினைப்புனத்தைப் போல இருக்கிறதாம். தினைப்புனத்தில் மனிதருடைய தலையைப் போலப் பானைக்கு உரு வெழுதி வைத்திருப்பார்கள். அதை நினைத்து இப்படிச் சொன்னார்.

வேணி முகிழ் நகை
வெண்டலை வைத்த ஏனல் புனம் ஒக்கும்

திருமுடியிலுள்ள கங்கைஅந்தத் தினைப்புனத்தைக் காவல் செய்யும் நிலையில் வைத்த பெண்ணைப் போல இருக்கிறாள்.

கங்கை அத் தண் புனத்தில்
நிலைவைத்த மாதரை ஒக்கும்.

அங்கே உள்ள நீண்டு வளைந்த பிறை அந்தப்பெண் கிளிகளை ஓட்டுவதற்காக வைத்த கவணைப் போல இருக்கிறது

கவண் ஒக்கும் நீள் பிறையே.

கவண் என்பது வளைவாக உள்ள கருவி. அதில் கல்லை வைத்துச் சுண்டி வீசிக் கிளிகளை ஓட்டுவது வழக்கம். வளைந்து நீண்ட பிறை அந்தக் கவணைப் போலத் தோற்றுகிறது.

குலைவைத்த செவ்விள நீர்குளிர்
பூம்பொழிற்
கொம்புக்கு இன்ப
முலைவைத்தது ஒக்கும் கமலேசர்
வேணி,
முகிழ் நகை வெண்
தலைவைத்த ஏனற் புனம் ஒக்கும்;
கங்கை அத்
தண்புனத்தில்
நிலைவைத்த மாதரை ஒக்கும்;
கவண் ஒக்கும்
நீள்பிறையே

குலையாக அமைந்த செவ்விள நீர்க்காய்கள் குளிர்ந்த பூஞ் சோலையாகிய பெண்ணுக்கு இன்பத்தை வழங்கும் நகில்களை வைத்தது போலத் தோன்றும். கமலையாகிய திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் தியாகேசர் திருமுடி, அரும்புகின்ற வெண்மையான பல்லையுடைய தசை இழந்த வெண்டலையைக் கிளிகள் அஞ்சுவதற்காக வைத்த தினைக் கொல்லையை ஒத்துத் தோன்றும்; கங்கை அந்தக் குளிர்ந்த கொல்லையில் காவல் செய்யும் நிலையில் குறிஞ்சி நிலமக்கள் இருக்க வைத்த பெண்ணை ஒக்கும்; நீண்ட பிறை கவணென்னும் கிளிகடி கருவியை ஒக்கும்.

குலை வைத்த - குலையாக வைத்த. கொம்பு - கொம்பு போன்ற பெண்; ஆகுபெயர். பூம் பொழிற் கொம்பு; உருவகம். இன்பம் வழங்கும் நகில்கள்: பருவச் சிறப்புடைய மங்கையர்கள் தம் நகில்களால் ஆடவருக்கு இன்பம் தருதலின் இவ்வாறு கூறினர். 'குலைவைத்த'

என்பது முதலிய அடை கமலேசர் என்பதன் முதற்பகுதியாகிய கமலைக்கு அடை, கமலா ஈசர், கமலேசர். வேணி - சடாமுடி. ஏனல். - தினை. நிலை - காவல் காக்கும் நிலையில். மாதா- ஒருமை; அர்: சாரியை. பிறை கவண் ஒக்கும். ஏகாரம் ஈற்றசை.

இறைவர் சடாமுடி தினைப் புனத்தைப் போல இருப்பதாகக் கற்பனை செய்தது இது.

திருவாரூர் நான்மணிமாலையில் 27-ஆவது பாட்டாக உள்ளது இது.



# திருக்கணித பஞ்சாங்கம்

தி. கி. நாராயணசாமி, கடலூர்-1

துந்துபி ஞு மார்கழி மீ (1982-டிசம்பர் — 1983-ஜனவரி)

திதி, நட்சத்திர காலம், முடியும் நேரம் (ரயில்வே மணிக்கணக்கில்)

| தமிழ்வ. | ஆங்கிலபவ. | கிழமை | திதி | நட்சத்திரம் |
|---|---|---|---|---|
| 1 | (16—12—82) | வியாழன் | பிரதமை 17-17 | மூலம் 18-33 |
| 2 | (17—12—82) | வெள்ளி | துதியை 19-57 | பூராடம் 21-38 |
| 3 | (18—12—82) | சனி | திரிதியை 22-43 | உத்திராடம் 24-48 |
| 4 | (19—12—82) | ஞாயிறு | சதுர்த்தி 25-24 | திருஓணம் 27-54 |
| 5 | (20—12—82) | திங்கள் | பஞ்சமி 27-51 | அவிட்டம் நாள் முழுதும் |
| 6 | (21—12—82) | செவ்வாய் | சஷ்டி 5-53 | அவிட்டம் 6-44 |
| 7 | (22—12—82) | புதன் | சப்தமி நாள் முழுதும் | சதயம் 9-10 |
| 8 | (23—12—82) | வியாழன் | சப்தமி 7-19 | பூரட்டாதி 11-00 |
| 9 | (24—12—82) | வெள்ளி | அஷ்டமி 8-02 | உத்திரட்டாதி 12-08 |
| 10 | (25—12—82) | சனி | நவமி 7-57 | ரேவதி 12-30 |
| 11 | (26—12—82) | ஞாயிறு | தசமி 7-03<br>ஏகாதசி 29-22 | அசுவனி 12-04 |
| 12 | (27—12—82) | திங்கள் | துவாதசி 26-59 | பரணி 10-53 |
| 13 | (28—12—82) | செவ்வாய் | திரயோதசி 24-03 | கார்த்திகை 9-03 |
| 14 | (29—12—82) | புதன் | சதுர்த்தசி 20-41 | ரோகணி 6-41<br>மிருகசிரிஷம் 27-56 |
| 15 | (30—12—82) | வியாழன் | ○பௌர்ணமி 17-03 | திருஆதிரை 24-59 |
| 16 | (31—12—82) | வெள்ளி | பிரதமை 13-19 | புனர்பூசம் 22-01 |
| 17 | (1—1—83) | சனி | துதியை 9-39<br>திரிதியை 6-14 | பூசம் 19-11 |
| 18 | (2—1—83) | ஞாயிறு | சதுர்த்தி 27-12 | ஆயில்யம் 16-40 |
| 19 | (3—1—83) | திங்கள் | பஞ்சமி 24-43 | மகம் 14-37 |
| 20 | (4—1—83) | செவ்வாய் | சஷ்டி 22-53 | பூரம் 13-09 |
| 21 | (5—1—83) | புதன் | சப்தமி 21-46 | உத்திரம் 12-23 |
| 22 | (6—1—83) | வியாழன் | அஷ்டமி 21-25 | அஸ்தம் 12-21 |
| 23 | (7—1—83) | வெள்ளி | நவமி 21-50 | சித்திரை 13-03 |
| 24 | (8—1—83) | சனி | தசமி 22-56 | சுவாதி 14-27 |
| 25 | (9—1—83) | ஞாயிறு | ஏகாதசி 24-37 | விசாகம் 16-27 |
| 26 | (10—1—83) | திங்கள் | துவாதசி 26-46 | அனுஷம் 18-55 |
| 27 | (11—1—83) | செவ்வாய் | திரயோதசி 29-14 | கேட்டை 21-45 |
| 28 | (12—1—83) | புதன் | சதுர்த்தசி நாள்முழுதும், | மூலம் 24-47 |
| 29 | (13—1—83) | வியாழன்● | சதுர்த்தசி 7-54 | பூராடம் 27-54 |

# 'கயிலை மாமுனிவருக்கு' மதுரையில் வரவேற்பு

மதுரை நவம்பர் 4-ம் தேதி. திருக்கயிலை நாதனைத் தரிசித்து மதுரை ஸ்ரீ மீனாட்சி சுந்தரேசுவரரைத் தரிசிக்க வருகைதந்த திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் 'கயிலைமாமுனிவர்' ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள், பேரூர் ஆதீனம் தவத்திரு இராமசாமி அடிகளார் ஆகியோர்க்கு மதுரை நகர் வாழ் சைவ அன்பர்கள் சார்பில் வடக்கு மாசிவீதி தருமபுர ஆதீன மடத்தில் காலையில் வரவேற்பு நிகழ்ந்தது வரவேற்புக் குழுத் தலைவர் நெ. பொன்னப்பன் வரவேற்றார். லெ. நாராயணன் செட்டியார், நா. தியாகராசன் செட்டியார், திருமாலை சூட்டி வரவேற்றனர். கொலுவழிபாடு திருமடத்தில் நிகழ்ந்தது. அன்பர்கள் அனைவரும் வணங்கித்திருநீறு பெற்றனர்.

காலை 11 மணிக்கு சுவாமிகள் இருவரும் திருநகர் சித்தி விநாயகர் கோயிலில் சைவ வேளாளர் சங்கச் சார்பில் வரவேற்கப் பெற்றனர். சங்கச் செயலர் கிருஷ்ணன், தலைவர் எம். எம். பிள்ளை, சு. செல்வவிநாயகம் ஆகியோர் வரவேற்று பாத காணிக்கை வைத்து வணங்கினர். பாராட்டுவிழாக் கூட்டம் சித்தி விநாயகர் வணக்கத்தோடு துவங்கியது. தருமபுர ஆதீனம் சார்பில் வித்துவான் தா. குருசாமி தேசிகர் சுவாமிகளைப் பணிந்து வரவேற்றார். புலவர் நீ. சி. சுந்தரராமன், கி. பழநியப்பபிள்ளை, ஈசுரவடிவு அம்மையார் ஆகியோர் பாராட்டிப் பேசினர். சுவாமிகள் இருவரும் திருக்கயிலை யாத்திரை அனுபவம் பற்றி உரையாற்றினர். பின்பு சங்கத்தார் சார்பில் நண்பகல் மகேசுவர பூஜை நிகழ்த்தப்பட்டது.

மாலை 5 மணிக்கு சுவாமிகள் இருவரும் ஸ்ரீ மீனாட்சி சுந்தரர் கோயில் சென்று வழிபட்டனர். மாலை 6-30 மணிக்குத் திருவள்ளுவர் கழகத்தில் பாராட்டு விழாக் கூட்டம் தொடங்கியது. விழாக் குழுவின் சார்பில் பி. டி. ஆர். கமலதியாகராசன் வரவேற்றுப் பேசி மாலை அணிவித்தார். லெ. நாராயணன் செட்டியார் தொடக்க உரையாற்றினார். மதுரைத் தமிழ்ச் சங்கம் சார்பில் செயலர் டி. பி.எம்.பெரியசுவாமி, தாளாளர் மா. தனுக்கோடி

பாண்டியன் ஆகியோர் பாராட்டிப்பேசி மாலை சூட்டினர். டாக்டர்ஆர்.வெங்கடசாமி திருக்கயிலைப் படத்தை வெளியிட்டார். பேராசிரியர் ந. சேதுரகுநாதனர் கவிஞர். சொ. சொ. மீ. சுந்தரம் ஆகியோர் பாராட்டிப் பேசினர். பி. டி. ஆர். கமலதியாகராசன், லெ. நாராயணன் செட்டியார் இருவரும் வரவேற்புக் குழுவின் சார்பில் சுவாமிகட்குப் பொன்னாடை போர்த்தினர். சுவாமிகள் இருவரும் பாராட்டு உரைக்கு வாழ்த்துக் கூறி அருளாசி வழங்கினர். திருக்கயிலை யாத்திரை அனுபவம் பற்றி இருவரும் உரையாற்றிய பின்பு வரவேற்புக் குழுவில் பாராட்டுதற்குரியவர்கட்கு சுவாமிகள் திருக்கயிலைப் படமும், திருக்கயிலைச் சிறப்பு மலரும் வழங்கி அனைவருக்கும் திருநீறு வழங்கினர் அமைப்பாளர், வித்துவான். தா. குருசாமி தேசிகர் நன்றி நவின்றார்.

மங்கல வாழ்த்துப் பாடியவுடன் விழா இனிது நிறைவுற்றது.

மதுரை தா. குருசாமிதேசிகர்



# இதமான வாழ்வுக்கு எளியவழிகள்

### புற்றுநோய்க்கு

சேங்கொட்டை [சேரான்கொட்டை]யை இழைத்து நீரில் கலந்து நீண்ட நாள் சாப்பிட புற்று நோய் நீங்கும்.

### இரத்த அழுத்த நோய்க்கு

சர்பகந்தி வேரைக்கஷாயம் வைத்துச்சிறிது தேன் கலந்து தினசரி சாப்பிட இரத்தக்கொதிப்பு குறையும்,

### சிதபேதி

கீழா நெல்லி இலையின் கொழுந்தைக் கஷாயம் வைத்து வேளைக்கு 1 அவுன்ஸ் விதம் 3 வேளை கொடுக்கக்குணமாகும்

**Dr. N. சடையப்பன்** S. M. P.

உ

சிவ சிவ

சிதம்பரத்தில்

# தேர்த் திருவிழா திருப்பல்லாண்டு ஓதுதல்

28—12—82 மார்கழி மாதம் 14ஆம் தேதி புதன்கிழமை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21ஆவது அதிபர்

**கயிலைமாமுனிவர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி**

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களின்**

அருளாணையின்வண்ணம் சிதம்பரத்தில் தேர்த்திருவிழாவில் சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு ஓதப்பெறும்.

1. திரு. M. கனகசபை பிள்ளை—சிதம்பரம்.
2. திரு. M. ரெத்தினம் பிள்ளை—சிதம்பரம்.
3. திரு. C. S. குமாரசுவாமி ஓதுவார்—கொள்ளிடம்
4. தேவாரமணி திரு. ஆ. சட்டையப்பன்—சிதம்பரம்.

வையத்து வாழ்வீர்காள் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுவீராக!

அருளாணையின் வண்ணம்

திருப்பனந்தாள்
1—12—82

R. சுப்பிரமணிய பிள்ளை
ஏஜண்டு, ஸ்ரீ காசிமடம், சிதம்பரம்

---

திருமாளிகைத்தேவ திருவிசைப்பா

தேர்மலி விழவிற் குழலொலி தெருவில் கூத்தொலி ஏத்தொலி ஒத்தின்
பேரொலி பரந்து கடலொலி மலியப் பொலிதரு பெரும்பற்றப் புலியூர்ச்
சீர் நில வலயத் திருநடத் தியல்பிற் றிகழ்ந்தசிற் றம்பலக் கூத்தா
வார்மலி முலையாள் வருடிய திரண்மா மணிக்குறங் கடைந்த தென்மதியே.

சேந்தனார் அருளிய திருப்பல்லாண்டு

திருச்சிற்றம்பலம்

1. மன்னுக தில்லை வளர்கநம் பத்தர்கள் வஞ்சகர் போயகல
பொன்னின்செய் மண்டபத் துள்ளே புகுந்து புவனியெல் லாம்விளங்க
அன்ன நடைமடவாள் உமைகோன் அடியோமுக் கருள்புரிந்து
பின்னைப்பிறவி யறுக்கநெறிதந்த பித்தற்குப் பல் லாண்டு கூறுதுமே.

2. மிண்டுமனத்தவர் போமின்கள் மெய்யடியார்கள் விரைந்து வம்மின்
கொண்டுங் கொடுத்துங் குடிகுடி ஈசற்காட் செய்மின் குழாம்புகுந்து
அண்டங் கடந்தபொருள் அளவில்லதோர் ஆனந்த வெள்ளப்பொருள்
பண்டு மின்றும் என்றுமுள்ள பொருளென்றே பல்லாண்டுகூறுதுமே.

3. நிட்டையி லாவுடல் நீத்தென்னை யாண்ட நிகரிலா வண்ணங்களும்
சிட்டன் சிவனடி யாரைச் சீராட்டுந் திறங்களுமே சிந்தித்து
அட்டமூர்த்திக்கென் அகம்நெக வூறும் அமிர்தினுக் காலநிழற்

பட்டனுக் கென்னைத்தன் பாற்படுத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

4. சொல்லாண்ட சுருதிப்பொருள் சோதித்த தூய்மனத் தொண்டருள்ளீர்
சில்லாண்டிற் சிதையும் சிலதேவர் சிறுநெறி சேராமே
வில்லாண்ட கனகத் திரள்மேரு விடங்கன் விடைப்பாகன்
பல்லாண் டென்னும் பதங்கடந் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

5. புரந்தரன் மாலயன் பூசலிட் டோலமிட் டின்னம் புகலரிதாய்
இரந்திரந் தழைப்பஎன் னுயிராண்டகோவினுக்கென்செயவல்லமென்றும்
கரந்தும் இரவாத கற்பக னாகிக் கரையில் கருணைக்கடல்
பரந்தும் நிரந்தும் வரம்பிலாப் பாங்கற்கே பல்லாண்டு கூறுதுமே.

6. சேவிக்க வந்தயன் இந்திரன் செங்கண்மா லெங்கும் திசைதிசையன
கூவிக் கவர்ந்து நெருங்கிக் குழாங்குழா மாய்நின்று கூத்தாடும்
ஆவிக் கமுதைஎன் ஆர்வத் தனத்தினை அப்பனை யொப்பமரர்
பாவிக்கும் பாவகத் தப்புறத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

7. சீரும் திருவும் பொலியச் சிவலோக நாயகன் சேவடிக்கீழ்
ஆரும் பெறாத அறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில்
ஊரும் உலகும் கழற உழறி உமைமண வாளனுக்காட்
பாரும் விசும்பும் அறியும் பரிசுநாம் பல்லாண்டு கூறுதுமே.

8. சேலும்கயலும் திளைக்குங்கண்ணார் இளங்கொங்கையிற் செங்குங்குமம்
போலும் பொடியணி மார்பிலங்கு மென்று புண்ணியர் போற்றிசைப்ப
மாலும் அயனும் அறியாநெறி தந்து வந்தென் மனத்தகத்தே
பாலும் அமுதமும் ஒத்து நின் றானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

9. பாலுக்குப் பாலகன் வேண்டி அழுதிடப் பாற்கடல் ஈந்தபிரான்
மாலுக்குச் சக்கரம் அன்றருள் செய்தவன் மன்னிய தில்லைதன்னுள்
ஆலிக்கும் அந்தணர் வாழ்கின்ற சிற்றம் பலமே யிடமாகப்
பாலித்து நட்டம் பயிலவல் லானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

10. தாதையைத் தாளற வீசிய சண்டிக்கிவ் வண்டத் தொடுமுடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்கோயிலும் போனகமும் அருளிச்
சோதி மணிமுடித் தாமமும் நாமமும் தொண்டர்க்கு நாயகமும்
பாதகத் துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

11. குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி எங்கும் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி மிகுதிரு வாரூரில்
மழவிடை யாற்கு வழிவழி யாளாய் மணஞ்செய் குடிப்பிறந்த
பழஅடி யாரொடுங் கூடிஎம் மானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

12. ஆரார் வந்தார் அமரர் குழாத்தில் அணியுடை ஆதிரை நாள்
நாரா யணனொடு நான்முகன் அங்கி இரவியும் இந்திரனும்
தேரார் வீதியில் தேவர் குழாங்கள் திசையனைத்தும் நிறைந்து
பாரார் தொல்புகழ் பாடியும் ஆடியும் பல்லாண்டு கூறுதுமே.

13. எந்தை எந்தாய் சுற்றம்முற்றும் எமக்கமுதாம் எம்பிரான் என்றென்று
சிந்தை செய்யும் சிவன் சீரடியார் அடிநாயன் செப்புறை
அந்தமில் ஆனந்தச் சேந்தன் எனைப்புகுந் தாண்டுகொண் டாருயிர்மேல்
பந்தம் பிரியப் பரிந்தவனே 'யென்று பல்லாண்டு கூறுதுமே.

திருச்சிற்றம்பலம்.

# "ஆசார்ய போகம்"

வித்துவான். திரு. அடிகளாசிரியர்,
சிறப்புநிலை இணைப்பேராசிரியர், சுவடிப்புலம், பனையோலைச் சுவடித்துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம் தஞ்சாவூர்.

தஞ்சை இராசராசேச்சுரத் திருக்கோவிலின் கருவறையின் தென்புறத்திலுள்ள முதற்படை இரண்டாம் படைகளில் வெட்டப்பட்டுள்ள முதலாம் இராசேந்திர சோழதேவன் கல்வெட்டு அவன் கொடுத்த ஆசார்ய போகத்தைப் பற்றிய செய்தியைக் கூறுகிறது.

## கல்வெட்டு

''கோப்பர கேசரி வர்மரான உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர்க்கு யாண்டு யகூ ஆவது நாள் இருபத்திரண்டினால் உடையார் ஸ்ரீராஜேந்திர சோழ தேவர் சங்கைகொண்ட சோழ புரத்துக் கோயிலினுள்ளால் முடி கொண்ட சோழன் திருமாளிகையில் வடபக்கத்து தேவாரத் துச் சுற்றுக் கல்லூரியில் தாநஞ் செய்தருளாவிருந்தது உடையார் ஸ்ரீராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய போகம் நம் உடையார் சர்வசிவ பண்டித சைவாசார்யர்க்கும் இவ்வுடையார் சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய் ஆர்ய[1] தேசத்தும், மத்திய தேசத்துத்தான், கௌடதேசத் துத்தான் உள்ளாராய் யோக்ய ராயிருப்பார்க்கே ஆட்டாண்டு தோறும் இத்தேவர் கோயிலில் ஆடவல்லான் என்னும் மரக்கா லால் உள்ளூர்ப் பண்டாரத்தே நிறைச்சளவாக இரண்டாயிரக் கல நெல்லு யாண்டாண்டு தோறும் சந்திராதித்தவல் பெறத் திருவாய் மொழிந்தருளத் திரு மந்திர ஓலை செம்பியன் விழுப்ப ரையன் எழுத்தினால் திருவாய்க் கேள்விப்படி கல்லில் வெட்டித்து இது. இவ்வம்சத்துள்ளசைவ ஆசார்யர்களே இத்தன்மம் ரக்ஷிக்க'' என்பது அக்கல்வெட் டின் செய்தியைக் கூறும் பகுதி யாகும்.

---

1. ''ஆர்ய தேசத்தில் உள்ள பல தேசங்களில் தோன்றியுள்ளா ராய் சைவாசாரியம் செய்ய யோக்கியராய் இருப்பார்க்கே'' என்று கருத்து.

## அறிஞர் கருத்து

இக்கல்வெட்டைப் படித்த அறிஞரெல்லாம் இராசேந்திர சோழதேவனுக்குச் சைவாசாரி யராய் விளங்கியவர் சர்வசிவ பண்டிதரென்றும், அவருக்கு இரண்டாயிரக்கல நெல் யாண்டு தோறும் அளிக்குமாறு ஏற்பாடு செய்தானென்றும், அரசனின் ஆசிரியராகிய சர்வசிவ பண்டிதரும் அவருடையசிடர்க ளும் எந்த நாட்டிலிருந்த போதி லும் கொடுக்கும்படி ஆசார்ய போகமாக யாண்டுதோறும் நெல் அளப்பதற்கு ஆணை பிறப்பிக்கப் பட்டதென்றும் எழுதியுள்ளனர். இவர்கள் கருத்து முற்றிலும் சரியா என்பதை நாம் ஆராய்வோம்.

## அறிஞர் கருதுக

மேற்கண்ட கல்வெட்டுத் தொடர், 'ராசேந்திர சோழ தேவனாகிய தனக்கு ஆசார்ய ராகிய சர்வசிவ பண்டிதர்க்கு' என்று எழுதப்படவில்லை; ''ஸ்ரீ ராஜராஜ ஈஸ்வரமுடையார் கோயிலில் ஆசார்ய போகம் நம் உடையார் சர்வசிவ பண்டித சைவ ஆசாரியார்க்கும்'' என்றே எழுதப்பட்டுள்ளது அதனால். சர்வசிவ பண்டிதர் ராஜராஜேஸ் வரமுடையார் கோவிலில் சைவா சாரியம் செய்பவராக யிருந்த தோடல்லாமல் இராசேந்திர சோழனுக்கும் சைவாசாரியராய் இருந்தனர் என்னும் உண்மை துணியப்படுகின்றது.

## தேவகாரியம் பார்ப்போர்

சிவாலயங்களில் சைவாசாரியம் செய்பவரைப்பற்றி நாம் நன்கு அறிந்துகொள்ள வேண்டும். காமிகாகமம் ஆசார்ய லட்சணப் படலத்தில் ஆசாரியரைப் பற்றிய செய்திகள் பல கூறப்பட்டுள்ளன. ''தேவ காரியம் பார்ப்போர் ஆசாரியார், அர்ச்சகர், ஸ்தானிகர், பாசகர், பரிசாரகர் என்று ஐவராவார்''. (சுலோகம்-11-12) ஆசார்யனுக்கு விதிக்கப் பட்ட சமஸ்காரங்கள் ஏழுவகை யாகும்; அவை சமயம், விசேடம், நிர்வாணம், அஸ்திராபிடேகம், ஆசார்யாபிடேகம், சிகாச் சேதனம், ஏழு விஷுவங்களின் சோதனம் என்பவையாம். (16-17) ஆசாரியர் நாட்பூசை யாகிய நித்தியமும் உத்சவமும் பிரதிஷ்டையாகிய நைமித் திகமும் காமியமாகிய பிராயச் சித்தமும் செய்வதற்குரியவ ராவார். (12) அர்ச்சகர்க்குச் சமயம் முதல் சிகாச் சேதனம் வரை ஆறு சமஸ்காரங்கள் விதிக்கப்பட்டுள்ளன. இவர் நாட் பூசையாகிய நித்தியம் மட்டும் செய்வதற்குரியர். உத்சவம் பிரதிட்டை பிராயச்சித்தம் என்பவைகளைச் செய்தல் கூடாது

(13). ஸ்தானிகர்க்குச் சமயம் முதல் ஆசார்யபிடேகம் ஈருகிய ஐந்து சமஸ்காரங்கள் விதிக்கப் பட்டுள்ளன (27). இவர் உத்சவ விக்கிரகங்கட்கு அலங்காரம் மட்டும் செய்யலாம்; மூல லிங்கத்தைத் தீண்டுதல் கூடாது (29). பரிசாரகர்க்குச் சமயம் முதலான நான்கு சமஸ்காரங்கள் விதிக்கப் பெற்றுள்ளன. (30) இவர் சிவாக்கினியினுல் சமயல் முதலானவற்றைச் செய்ய வேண்டும் (14). பரிசாரகருக்குச் சமயம் முதலான மூன்று சமஸ் காரங்கள் விதிக்கப்பட்டுள்ளன (32) அபிடேக தீர்த்தம் பூசைக்கு வேண்டும் பொருள் முதலான வற்றைத் தயாரித்து வைத்தல் இவர்க்குரிய தொழிலாகும்; இவற்றிற்கு வேறுபட்ட தொழில் களை இவர்கள் செய்தல் கூடாது (15)'' என்று தேவகாரியம் பார்ப்பவரின் வகைகளையும் பெயர்களையும் அவர்களுக்குள்ள சமஸ்காரங்களையும் செயல் களையும் அவ்வாகமம் விளக்க மாகக் கூறியுள்ளது.

மேற்குறிப்பிட்ட காமிகாகம வசனங்களால் திருக்கோவில் களில் தேவகாரியம் செய்யும் ஐவருள் ஆசாரியர் முதல் என்பதை அறிந்துகொண்டோம். மேலும் ஆசாரியரின் வகைகளைப் பற்றி அவ்வாகமம் கூறும் செய்தி களையும் பார்ப்போம்.

## ஆசாரியர் வகை.

''ஆசாரியர் சர்வசாதகர், போதகர், ஆசார்யர் என்று மூன்று வகையினராயிருப்பர்(65) எல்லாத் தத்துவார்த்தங்களிலும் பாண்டித்தியமுள்ளவராய், மந்திரம், கிரியை, பாவனை முத லியஎல்லாக் கர்மங்களையும் (சர்வ தத்துவார்ந்தங்களையும் சர்வ கர்மங்களையும்) செவ்வையாய் அறிந்திருப்பவர் 'சர்வசாதகர்' என்று கூறப்படுவர். மந்திரம், கிரியை, பாவனை இவைகளைப் போதகம் செய்பவர் போதக ரெனக் கூறப்படுவர். எல்லாக் கர்மங்களையும் ஆசரிப் பவர் ஆசார்யரெனக் கூறப்படு வார்(66). ஆசார்யரைக் காட் டிலும் போதகாசாரியர் மேலான வர்போதகரைக் காட்டிலும்சர்வ சாதக ஆசாரியர் மேலானவரா வார்(67).

மேற்கண்ட ஆகம வசனங்களை வைத்துக்கொண்டு மேற்குறித்த கல்வெட்டிற் கண்ட சைவா சாரியர்க்குச் 'சர்வசிவ பண்டிதர்' என்று பெயரிருத்தலை நோக்கினுல் அப்பண்டிதர் மூன்று வகையான ஆசாரியரில் தலைமையான 'சர்வ சாதகர்' என்னும் ஆசாரியராவர் என்பது புலனுகின்றது. சர்வ சாதகர், சர்வசிவ பண்டிதர் என்னும் சொற்களில் உள்ள 'சர்வ' என்னும் சொல்லை அறிஞர் கருதிப்பார்க்கவேண்டும்.

மேலும் அவ்வாகமம் கூறும் சில செய்திகளைப் பார்ப்போம். "இந்த மூன்றுவகையான ஆசாரியர்களும் உத்சவம் பிரதிட்டை முதலான காரியங்களைச் செய்யும்பொழுது தனியே சாதகர் ஒருவரைத் தங்களுக்கு உதவியாக உடன் வைத்துக் கொண்டு செய்தல் வேண்டும் (68)" என்று கூறுகின்றது. இவரைச் சாதகாசிரியர் என்று கூறுவோம்.

மேற்கண்ட கல்வெட்டில் சர்வசிவ பண்டிதரின் சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய்க் குறிக்கப் பட்டவர் மேற்படி பண்டிதருக்கு உத்சவம் முதலான காரியங்களில் சாதகராயிருக்கும் போதகர் முதலான ஆசாரியரும் சாதகா சாரியருமாவார்.

சோழன் ஆணையின் கருத்து.

இராசராசேச்சுரமுடையார் கோயிலில் மேற்கண்டபடி சைவா சாரியம் செய்யும் சர்வசிவ பண்டிதருக்கும், அவருடைய சிஷ்யரும் ப்ரசிஷ்யருமாய் ஆர்ய தேசத்திலும் மத்திய கௌட தேசங்களில் தோன்றி யுள்ளவராய் மேற்படி கோவிலில் சைவாசாரியம் செய்ய யோக்கிய ராயிருப்பார்க்கே ஆண்டாண்டு தோறும் கோவிலிலுள்ள வருமானத்திலிருந்து இரண்டாயிரக் கல நெல்லை ஆசார்யபோகமாகக் கொடுக்க இராசேந்திர சோழ தேவன் ஆணையிட்டானேயன்றி சர்வசிவ பண்டிதர் தனக்கு ஆசார்யராயிருக்கிறார் என்ற ஒன்றைமட்டும் கருத்தில் வைத்துக்கொண்டு அவரும் அவருடைய சீடர்களும் எந்த நாட்டில் இருந்த போதிலும் ஒவ்வொருவருக்கும் இரண்டாயிரக்கலக் கோவில் நெல்லை அளந்துவிட வேண்டும் என்று ஆணையிட்டானல்லன். மேற்கண்ட கல்வெட்டில் 'கோயிலின் ஆசார்யபோகம்' என்னும் சொற்றொடரை அறிஞர் எண்ணிப் பார்க்கவேண்டும்.

பஞ்சாசார்யர்

பல கல்வெட்டுகளில் 'பரியார மூலப்பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகன்மிகள்' என்றும் 'பதிபாத அல்லது பிரதிபாத மூலப்பட்டுடைப் பஞ்சாசாரிய தேவகன்மிகள்' என்றும் வரும் சொற்றொடருக்குக் கல்வெட்டுத் துறையினர் விளக்கம் எழுதி யுள்ளனர். பிறரெல்லாம் கோயில் அருச்சகர் என்று குறித்துப் போந்தனர். பஞ்சாசாரியர் இன்னார் என்பதை

"ஆசார்யாதி ஸமாரப்ய பரிசார சமாவதி
பஞ்சாசார்ய மிதிக்யாதம் தத்தத் ஸம்ஸ்காரகுண்யத:
(காமிகம் - ஆசார் - 62)

''ஆசாரியர் முதலாகப் பரிசாரக ரிறுதியாய் அவர் சமஸ்காரரானு குணமாய்ப் பஞ்சாசார்யரெனப் படுவார்'' என்னும் காமிக சுலேகாத்தால் ஆசாரியர், அர்ச்சகர், ஸ்தானிகர், பாசகர், பரிசாரகர் என்னும் ஐவரும் பஞ்சாசாரியர் என்று வழங்கப்படுவார் என்பதை அறிந்து கொள்கின்றோம். இப்பஞ்ச 'சாரியரின் ஒழுக்கத்தை

நெஞ்சா சார நிறைவொடு குறையாப்
பஞ்சா சாரியப் பகுதி யோர்க்கும்''
(தென் - வால்யூம் – 7 - 940)

என்று கல்வெட்டொன்று கூறுவதைக் காண்க.

### முடிப்புரை

கல்வெட்டாராய்ச்சியை எல்லாரும் மிக எளிமையாகச் செய்து விடமுடியும் என்று சிலர் கருதுகின்றனர். நம் தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களை ஆராய்வதற்குத் தமிழிலக்கிய உணர்ச்சியும் வடமொழியறிவும் உலகியலறிவும் நன்கு வாய்க்கப்பெற்றவரே தகுதியாவர் என்பதைத் தமிழுலகம் எண்ணிப் பார்க்கவேண்டும்.



## திருப்பணி கொள்ளும் திருநாரையூர்

தென்னார்க்காடு மாவட்டம் காட்டுமன்னார்குடி வட்டம் திருநாரையூர் அருள்மிகு சுயம்பிரகாச சுவாமி ஆலயத்திருப்பணி வேலை திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்கள் அருளாசியினால், நிகழும் துன்மதி ஆ தைமீ 30வ [12—2—82] அன்று துவக்கப்பெற்று சிதம்பரம் திரு G. வாகீசம்பிள்ளை அவர்களை, திருப்பணிக் கமிட்டி தலைவராகக்கொண்டு நடைபெற்றுவருகின்றது. அன்பர்கள் திருப்பணிவேலைக்கு தாராளமாக நன்கொடை அளித்து ஸ்ரீ பொல்லாப்பிள்ளையாரின் அருளுக்குப் பாத்திரராகக் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

S. திருநாவுக்கரசு பிள்ளை,
பொருளாளர்,
திருப்பணிக்கமிட்டி,
9, கனகசபைநகர், சிதம்பரம்.

# நூல்நிறை

**மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர்தமிழ்மாலை**

உரை ஆசிரியர்:

ஆங்கிரச எஸ். வெங்கடேச சர்மா. பக்கம்88; விலை ரூ 3-00 வெளியீடும், கிடைக்குமிடம்:— ஆங்கிரச சு. வேங்கடேச சர்மா, 5டெலிபோஸ்டு காலனிகுறுக்குத் தெரு, மேலமாம்பலம், சென்னை 600 033.

கண்ட பெரும்மந்திரமாம் மூவர் பாடல்களுக்குப்பொருள் காணாது அயரும் அன்பர்க்காக வெளியிடப் பெறும் தொடர் உரை நூல்களில் 12-ஆவதாகப் பரிமளிக்கிறது இந்நூல்.

இதன் ஆசிரியர் வெங்கடேச சர்மா அவர்கள் செந்தமிழ்ப் புலமையும், ஆங்கில, சமஸ்கிருத மொழிப்பற்றும் மிக்கவர்; நிரந்தினிது சொல்லுதல் வல்லவர்; எளிய இனிய தமிழ்ச் சொற்களால் ஏற்றமேற்கோள்களுடன் ஏற்றம் பெற நூல் அமைந்துள்ளது. சித்தாந்தக் கருத்துகள் விளக்கப் பெற்றுள்ளன. இலக்கண உரைகள் ஏற்றவிடத்துக்காட்டப் பெற்றுள்ளன.

சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்ல வேண்டும். அதற்கு இந்நூல் நிரம்ப உதவியாக அமையும்.

புலவர்: முருகு. சுவாமிநாதன்
எம். ஏ., பி. லிட்.,



**மந்த்ரார்த்தங்கள்**

(மந்த்ரங்களுக்கு அகண்டார்த்த விவரணம்) (ஆசிரியர் வித்வான் ஜி. என். வெங்கட நரசையா; பக்கங்கள்: 12+162; விலைரூ. 15. கிடைக்கும்: திரு. ஜி. நாராயணன், 125கல்லூரிச் சாலை, நங்கைநல்லூர், சென்னை 600061)

இது ஸ்ரீ சிதாநந்தநாதரின் நூற்றாண்டு விழா வெளியடாகும் பூர்ணபோதம் சிஷ்யானுசாசனம் முதலிய பல நூல்களை இயற்றி வெளியிட்டுள்ள பழுத்த அநுபவம் படைத்தவர் இந்நூல் ஆசிரியர்.

மகா கணபதி, பஞ்சதசி, வாக்வாதினி, மகா வாராகி, தட்சிணாமூர்த்தி, மகா காளி, வநதுர்க்கா முதலிய 42 மந்திரங்களுக்குப் பொருளெழுதப் பெற்றுள்ளது இந்நூலில். ஒவ்வொரு மந்திரத்

திற்குப் பொருள் எழுதும் முன் அம்மந்திரத்தைப் பற்றிய அற்புத மான விளக்கம் ஒன்றும் தரப் பெற்றுள்ளது. ஸ்ரீ வித்யா தத்துவ விளக்கங்கள் இந்நூலில் ஜீவனுக விளங்குகிறது.

ஸ்ரீ சிதாநந்தர் அருளிய ஸ்லோகம் ஒன்றன் பொருளை ஆசிரியர் தம் முன்னுரையுள் கொடுத்துள்ளார். 'அக்னியில்லாத சாம்பலில் சொரியப்பட்ட அவியானது எங்ஙனம் பயனற்றதாகுமோ, அங்ஙனமே அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளாமல் சப்தத்தை உச்சரிப்பது பயனற்றதாகும்' என்பது அப்பகுதி. அர்த்த ஞானம் வளர்ச்சிநிலையன்று; அடித்தளமே ஆகும் என உணரலாம்.

இந்த அடிப்படையில் சொல்லுக்குச் சொல் விளக்கங்களும் மந்திரங்களின் தாத்பரியங்களும் சொல்லப் பெற்ற இந்நூல் ஆத்திகர்கள் அனைவரின் இல்லங்களிலும் உள்ளங்களிலும் இருக்க வேண்டிய நூலாகும்.



உ
சிவ சிவ

கன்னியாகுமரி ஆச்சிராமம் திருப்பனந்தாள்
திருமுறை அன்னம்பாலிப்பு வகையரு நிதி

# சுசீந்திரத்தில்

## திருவாதிரைத் திருவிழாவில்
## தேவார கோஷ்டி

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அதிபர்
'கயிலைமாமுனிவர்' ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான்**
**சுவாமிகள் அவர்களின்**
அருளாணையின் வண்ணம் நடத்தப் பெறுவது.

*21—12—82 முதல் 30—12—82 முடிய*

**சுசீந்திரத்தில் ஸ்ரீ தாணுமாலயசுவாமி தேவஸ்தானத்தில் நடைபெறும் மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருவிழாவில்**

*27—12—82 முதல் 29—8—82 ஷ நிதியின்படி* தேவார இன்னிசைக் கோஷ்டி நடத்தப்பெறும்.

அன்பர்கள் தேவார இன்னிசை கேட்டு மெய்ஞ்ஞானம் பெறுவாராக!

திருநெறிய தெய்வத் தமிழ் ஓதும் திருமுறைவாணர்கள்:—

1. தமிழ்மறை இன்னிசைப் பண்மணிகள்
   திரு. டி. எம். விசுவலிங்கம் சபாபதி சகோதரர்கள்,
   திருவாவடுதுறை.
2. திரு டி. தம்பையா ஓதுவார்,
   திருமுறைப் பணி, ஸ்ரீ காசிமடம், ஆச்சிராமம்.

மற்றும் தக்க பக்கவாத்தியங்கள்.

ஆணைப்படி,
பா. கனகசபாபதி பிள்ளை,
ஏஜெண்டு, ஸ்ரீ காசிமடம்.

ஆச்சிராமம்,
11—12—82

# சிவப்பிரகாசம்

தெளிவுரை

கு. சுந்தரமூர்த்தி M. A. திருப்பனந்தாள்.

58 கண்ணொளி விளக்க ளித்துக்காட்டிடும் என்னின் முன்னம்
கண்ணொளியொன்றும்இன்றும், விளக்கொளி கலந்த வற்றைக்
கண்ணொளியகல நின்றே கண்டிடும், வேறுகாண,
கண்ணொளிவி ளக்கின் சோதி கலந்திடும், கருத்து ஒன்றன்றே.

(தெ-ரை) விளக்கு, கண்ணுக்கு ஒளியைக் கொடுத்துப் பொருள்களைக்காட்டும் என்று கூறில், அவ்விளக்குக் காட்டுவதற்கு முன் கண்ணுக்கு ஓர் ஒளியும் இல்லை என முடியும். விளக்கது ஒளி கலந்த பொருள்களைக் கண்ணின் ஒளி, வேறாக நின்று காணும். இவ்வாறு வேறாக நின்று காணும் பொழுதும், விளக்கது ஒளியோடு கூடிக் காண்பதன்றித் தனித்து நின்று காணும் இயல்பு உடையதல்ல. கண் ஒளி விளக்கொளியோடு கலந்து நிற்கும். அங்ஙனம் கலந்து நிற்பினும் ஆராயுமிடத்து அவை ஒன்றல்ல; வேறேயாம்.

பொருள்களைக் காண்பதற்குரிய ஒளியைக் கண்ணுக்குக் கொடுப்பது விளக்காதல் போல, உயிர்க்கு அறியும் தன்மையையும் இறைவனே கொடுப்பான் என்பர் நிமித்த பரிணமவாதியர். அதுவே உண்மையானால் கண்ணுக்கு ஒளியே இல்லை என்பது கருத்தாகும்; அன்றியும் பார்வையில்லாத குருடனும் விளக்கு ஒளி கொண்டு பொருள்களை அறிதல் வேண்டும். அவ்வாறு ஆதல் இயல்பில்லை என்பது தெளிவு. ஆதலின் கண்ஒளியும் விளக்கொளியும் தம்மில் கலந்திருக்கும் பொழுதே பொருள்களைக் காண இயலும் என்பது பெறப்படுகின்றது. அது போன்றே உயிரது அறிவும் இறையருள் அறிவிக்க அறியும் இயல்பினது என்பதாம். விளக்கொளி தன் பரப்பிற்குட்பட்ட எல்லாப்பொருள்கள் மீதும் பரவியிருக்கும். ஆனால் கண் தான் விரும்பும் பொருளை மட்டும் சுட்டிக் காணும். கண் ஒளி, இருளில் இருக்கும் பொருளை அறியும் தன்மையதன்று விளக்கொளியைக் கொண்டே அறியும். இது போன்றே உயிரும் இறையருள் துணை கொண்டே எதனையும் அறியவல்லது என்பது விளங்கும். இவ்வாறு கண் ஒளிக்கு விளக்கொளி துணை நிற்பினும் விளக்கொளி வேறு கண்ணொளி வேறு. அதுபோன்றே இறைவனும் வேறு, உயிரும் வேறாம். கருத்து—ஆராயுமிடத்து.

உயிர் சார்ந்ததன் வண்ணமாய் அறியும் இயல்பானது.

59. ஓரிடத் திருத்தல், மாயா வுருநிறைந் திடுதல், ஒன்றும்
பேரிடத்து உறைதல் தானே, பிறங்குஅறி வாகி நிற்றல்.
சோர்வுடைச் சடம்நிகழ்த்தல்எனும்இவை சொல்லார் நல்லோர்,
ஓரிடத்து உணரும் உண்மை ஒளிதரும் உபலம் போலும்.

(தெ - ரை) உயிர் உடலில் ஓர் இடத்து இருந்து அறிதலும் மாயையின் விளைவதாய் உள்ள உடலில் நிறைந்து நின்று அறிதலும், உடலில் எவ்விடத்தும் முழுமையாய் நின்று அறிதலும், ஒரு முதல்வன் அறிவிக்க அறிவதன்றித் தானே விளங்குகின்ற அறிவாய் நின்று அறிதலும், அறிவியல் பொருள்களாகிய மனம் முதலிய கருவிகள் அறிவைக் கொடுக்க அறிதலும் என்னும் இக்கொள்கைகளை நன்னெறி நிற்பவராகிய சைவ சித்தாந்திகள் கூறார். உயிர் அறியும் தன்மையை ஆராயுமிடத்து ஒளியைத் தரும் படிகக்கல் போலச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் என்றலே பொருந்தும்.

உயிர் உடலில இதயத்திடத்து மிகச் சிறியதாய் இருக்கும் என்றும், அதன் அறிவு எங்குப் பரந்து இருக்கும் என்றும் மிருதி நூலார் கூறுவர். உயிர் ஓரிடத்து இருக்குமாயின் வடிவுடையதாதல் வேண்டும்; அறிவுடையதாதலும் வேண்டும்; அவ்வாறு இன்மையின் அது பொருந்துவது அன்றாம். உயிர் உடல் எங்கும் நிறைந்து நின்று அறியும் என்பர் சமணர்; உடல் எங்கும் உயிர் நிறைந்து இருக்குமாயின் உடலின் பெருமை சிறுமைக்கு ஏற்ப அதுவும் வடிவு பெற்றிருத்தல் வேண்டும். உடம்பில் ஓர் உறுப்பிற்கு அழிவு நேரினும் உயிரிலும் ஒருகூறு அழிவு அடைதல் வேண்டும். இறுதியாக உடம்பு அழியுமிடத்து உயிரும் அழிதல் வேண்டும். அவ்வாறின்மையின் அதுவும் பொருந்துவது அன்றாம் அறிவு என்பது குணமாம். குணம் அக்குணத்தையுடைய பொருள் அளவில் நிற்பது அன்றி அப்பொருளின் வேறாய்ப்பரவி நிற்கும் என்பதும் பொருந்துவது அன்றாம். உயிர் இறைவனைப் போல எவ்விடத்தும் பரவி இருந்து அறியும் என்பர் ஐக்கியவாதிகள். உயிர் நனவு முதலிய உணர்வு எல்லைகளின் பாற்படுதலாலும், இறப்பும் பிறப்புமதாய போக்குவரவுகளைப் பொருந்தலானும், ஐம்பொறி வழி நுகரும் பொருள்களை ஒவ்வொன்றாகவே அறிதலானும் அதுவும் பொருந்துவது அன்றாம். உயிர் தானே அறியும், ஒருவர் அறிவிக்க வேண்டுவதில்லை என்பர், சிவ சமவாத சைவரும், ஈசுவர அவிகாரவாத சைவரும் ஐக்கிய வாத சைவரும், அவ்வாறாயின் ஐம் பொறிகளும் மனம் முதலிய அகக் கருவிகளும்

இன்றி உயிர் தானே அறிதல் வேண்டும். அவ்வாறு இன்மையின் அதுவும் பொருந்துவது அன்றும். உயிர் அறிவில்லாதது ஒன்று-அதற்கு மனம் முதலிய கருவிகள் அறிவைக் கொடுக்கின்றது என்பர் நியாய வைசேடிகர். இயல்பாகவே அறிவில்லாத உயிர்க்குக் கருவிகள் வழி அறிவு வரும் என்றலும் பொருந்துவது அன்றும். இவ் ஐவகை யோரையும் மறுக்கும் முகமாக இப்பாடல் அமைந்துள்ளது: எனவே உயிர் படிகம் போலத் தான் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் இயல்பினது என்பதே அமைவதாம். பிறங்கு; விளங்குகின்ற. உயிரின்றி மனம் முதலிய கருவிகள் தொழில் படாமையின் அவற்றைச் 'சோர்வுடைச் சடம்' என்றார். சோர்வு - ஒன்றன் துணையின்றி இயங்காத தாழ்வு. உபலம் - படிகக்கல்.

## ஐந்தவத்தையின் இலக்கணம்

### காரிய கேவலம்

60. எண்ணவொன் றிலாதது அதீதம், எய்திய துரியத் தொன்று
நண்ணிடும், சுழுத்தி தன்னில் நயந்துள்ளது ஒன்று, பின்னும்
அண்ணிடும் கனவு தன்னில் ஆறு ஏழாம் சாக்கிரத்தின்
கண்ணுறும் அஞ்சா றுய கருவிகள் மருவுந் தானே.

(தெ-ரை) உயிர்ப்படங்கலில் (துரியாதீதநிலையில்) எண்ணுதற்கு ஒரு கருவியுமின்றிப் புருடதத்துவமாய் இருக்கும். அதன் பின் பொருந்திய பேருறக்கநிலையில், உயிர்க் காற்று என்னும் ஒரு கருவி பொருந்தும். உறக்கத்தில் உயிர்க் காற்றுடன் சித்தம் என்னும் ஒரு கருவியும் பொருந்தி நிற்கும். கனவு நிலையில் இவற்றுடன் ஒலிமுதலிய புலனைந்தும், நடத்தல் முதலிய தொழிலைந்தும், மனம், புத்தி, அகங்காரம் என்னும் அகக் கருவிகள் மூன்றும், இவையன்றி எஞ்சிய ஒன்பது காற்றுக்களும் பொருந்தி நிற்கும். நனவு நிலையில் இவற்றுடன் அறிபொறிகள் ஐந்தும், தொழிற்பொறிகள் ஐந்தும் பொருந்திநிற்கும். இவ்வாறு இக் கருவிகள் பொருந்த உயிர் தொழிற்படும்.

கேவலம், சகலம், சுத்தம் என்பன காரணாவத்தைகளாம். இவற்றின் காரியமாக நிகழ்வனவும் கேவலம், சகலம், சுத்தம் என்ற மூன்றும். இவை ஒவ்வொன்றும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப் படங்கல் என்னும் ஐந்து அவத்தைகள் உடையவாம். இவற்றுள் காரியகேவலம் இந் நூற்பாவால் கூறப்பட்டுள்ளது. ஐந்து, ஆறு ஆய கருவிகள் - ஐந்துஎன்னும் நெறியில் வரும் கருவிக[ள்] அவ்வாறு வருவன அறிவுப் பொறிகளும் தொழிற் பொ[றி]களுமாம். அண்ணிடும் — பொருந்திடும்,

61. இவ்வகை அவத்தை தன்னில் எய்திடும் கரணம் எல்லாம்
மெய்வகை யிடத்தில் உற்று மேவுமா கண்டு மிக்க
பொய்வகைப் பவம்அகற்றப் புரிந்திடில் அருளால் ஆங்கே
ஐவகை அவத்தை உய்க்கும் அறிவினல் அறிந்து கொள்ளே.

(தெ-ரை) இவ்வாறு மேற்கூறிய ஐவகை அவத்தைகளில் பொருந்துகின்ற கருவிகள்யாவும், உடலில் ஒவ்வொரு இடத்தும் இருந்து தொழிற்படும் நிலைமையை முறையாக அறிந்து, இக் கருவிகளின் வழி உணரப்படும் நிலையில் பொய்ப் பொருள்களினின்றும் நீங்குமாறு, குருவருள் வழிநின்று நனவு நிலைக்கு உரித்தான புருவ நடுவில் நின்று, உய்தற்குரிய நிலையைச் செய்யின் திருவருட் கருணையால் அவ்விடத்தில் நின்மல சாக்கிரம் முதலிய தூய உணர்வு நிலைகண் ஐந்தும் செலுத்தடபடும். இவற்றைக் குருவருள் வழிநின்று அறிவாயாக.

மெய் வகையிடம்-உடற்கூற்றில் விளங்கும் ஒவ்வொரு இடத்தும். புருவநடுவில் நனவும், கழுத்தில் கனவும், இதயத்தில் உறக்கமும், கொப்பூழில் பேருறக்கமும், அதற்குக் கிழாய மூலாதாரத்தில் உயிர்ப் படங்கலும் நிகழும். மூலாதாரத்தினின்றும் மேல்நோக்கி நனவு நிலக்கு வரும் உணர் வெல்லைகளே இதற்த முன்னைய பாடலில் விவரிக்கப்பட்டதாம். அவ்வாறு உயிர் பெற்ற உணர்வு கொண்டு, நிலையில் பொருள்களைத் துறந்து இறையருளால் நிலையுடைய பொருளை உணர்ந்து சிந்தித்தல் வேண்டும் என்பதையே இப்பாடல் அறிவிக்கின்றது. இவ்வாறு சிந்தித்தற்குரிய இடம் புருவ நடுவேயாம். அச் சிந்தனையும், நனவின் நனவு, நனவில் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப் படங்கல் என ஐவகைபடும். இவை காரிய சகலம் என்றும், சகலத்தில் சகலம் என்றும், மத்தியாலவத்தை என்றும் கூறபபடும் இவற்றில் நனவில் நனவில் சிவ தத்துவம், சத்தி தத்துவம், சாதாக்கியதத்துவம், ஈசுவர தத்துவம் வித்யா தத்துவம் ஆகிய ஐந்து தத்துவங்களும் தொழிற்படுத்தும். நனவில் கனவில், சிவதத்துவம் முதல் ஈசுவர தத்துவம் இறுதியாக உள்ள நான்கு கருவிகளும், நனவில் உறக்கத்தில் சிவதத்துவம் முதல் சாதாக்கிய தத்துவம் இறுதியாக உள்ள மூன்று கருவிகளும், நனவில் பேருறக்கத்தில் சிவதத்துவம், சத்திதத்துவம் ஆகிய இருகருவிகளும், நனவு உயிர்ப்படங்கலில் சிவதத்துவமாகிய ஒரு கருவியும் கலை முதலியவற்றைச் செலுத்தி நிற்கும். புருவ நடுவில் உயிர் இவ் ஐவகை

அவத்தைகளையும் அடையும் பொழுது, ஐவகை உணர்வு வழி வரும் பொருள்களைப் பற்றுவதும் விடுவதுமாக நிற்கும். பற்றுவதை நினைப்பு (சகலம்) என்றும், விடுவதை மறப்பு (கேவலம்) என்றும் கூறுவர். இந்நிலைமையும் திருவருள் வழி உணர்ந்து புருவ நடுவில் உயிரை நிலைபெற வைத்துத் திருவைந்தெழுத்தை முறையாக ஓதின், கருவிகள் வழி வரும் புன்மை நீங்கி இறைபருள் வழி வரும் ஞானம் விளங்கும். இதனைச் சுத்தாவத்தை என்பர். சுத்தாவத்தையாவது நினைப்பும் மறப்பும் இன்றி இறையருட் சார்பில் உயிர் அழுந்தி நிற்பதாம், இதனை நின்மலாவத்தை என்பர். இந்நிலையிலும் நனவு முதலிய ஐந்து அவத்தைகள் உண்டாப. அவற்றுள் நின்மல சாக்கிரமாவது அருளால் தன்னை அறிவதாம். நின்மல சொபபனம என்பது அவ்வாறு அறிந்தபின் தனக்கென ஒருசெயலின்றி அவ் வருளையே தனக்கு ஆதாரமாய் அதன்கண் அசைவற நின்று அதனையே காண்பதாம். நின்மல சுழுத்தியாவது உயிரின் அறிவு, இச்சை, செயல்கள் தோன்ருது அவ்வருள் தாஞகி எதிர்ப்பாடு ஏது மின்றி இருப்பதாம். நின்மல துரியமாவது பலவாசனை சிறிதும் இன்றி இன்ப ஒளி தோன்றுமிடமாம். நின்மலதுரியாதீதமாவது அவ் இன்பத்தைப் பெற்ற தானும் அதனை வழங்கிய முதலுமின்றி அவ் வின்பே தாஞய் நிற்பதாம்.

### காரணுவத்தைகளின் இயல்வு

62. நீக்கமில் அதீதம் மாசு நிறைந்தகே வலமாம் நீர்மை,
சாக்கிரம் கலாதி சேர்ந்த சகலமாந் தன்மை யாகும்,
னக்கமில் இரண்டும் கூடாது ஒழியவோர் நிலையினீடும்,
சாக்கிரா தீதம் சுத்தத் தகைமைய தாகும் தானே.

(தெ-ரை) காரிய கேவலத்தில் கருவிகள் வழி இயங்கி அறியாமை நீங்காத உயிர்ப்படங்கலானது, ஆணவம் நிறைந்த காரண கேவலத்தின் தன்மையை ஒக்கும். காரிய சகலத்தில் உள்ள நனவு நிலை, கலை முதலிய தத்துவங்கள் சேர்ந்து தொழிற்படும் காரண சகலததை ஒக்கும். மேற் கூறிய இரு நிலையுமின்றி ஒப்பற்ற அருள் நிலையில் நிலை பெற்று இருக்கும் நனவில் வரும் உயிர்ப் படங்கல் காரண சுத்தாவத்தையின் தன்மையை ஒக்கும்.

காரண கேவல நிலையாவது உயிர் தனது அறிவிச்சை செயல் களின்றி முழுமையாக ஆணவத்தால் மறைக்கப் பட்டுத் தான்

மட்டும் இருக்கும் நிலையாம். காரண சகலமாவது உயிர், கலை முதலிய தத்துவங்களுடன் கூடி நின்று படைப்புக் காலம் தொட்டு வினை வயத்தால் பிறந்திறந்து திரியும் நிலையாம். சாக்கிராதீதமாவது நினைவும் மறப்புமின்றித் தன் முனைப்பற்றுச் சிவத்தொடு ஒருமையுற நிற்கும் நிலையாம்.

உயிர் பொருள்களை அறியும் முறைமை

63. மருவிய பொறியில் ஒன்றும் மாபூதம் ஐந்தில் ஒன்றும்
கருவிகள் நான்கும் நீங்காக் கலாதிகள் ஐந்துங் கூட
ஒருபுலன் நுகரும் இந்த ஒழுங்கு ஒழிந்து உயிரும் ஒன்றைத்
தெரிவுறாது, அவன்ஒ ழிந்தஅத் திரள் களும் செயல் இலாவே.

(தெ-ரை) தத்தமக்குரிய புலன்களைப் பொருந்திய ஐம்பொறிகளில் ஒன்றும், அதற்குச் சார்பாய ஐம்பெரும் பூதங்களில் ஒன்றும், அகக் கருவிகள் நான்கும், அகக் கருவிகளை விட்டு நீங்காத கலை முதலிய ஐந்தும் கூடவே உயிர், ஒரு பொருளை நுகரும். இம் முறையை விடுத்து உயிரும் ஒன்றை அறிய மாட்டாது; இதனை ஒழிந்து அத் தத்துவங்களும் தொழிற்படாவாம்.

மனம் முதலிய அகக்கருவிகளைக் கலை முதலிய கருவிகள் விட்டு நீங்காமையின் 'நீங்காக்கலாதிகள்' என்றார். கலை சித்தத்துக்கு உட் கருவியாய் நின்று நுகர்வு தலைப்பட எண்ணும் நினைவை எழுப்பும்; நியதி புத்திக்கு உட்கருவியாய் நின்று நுகர் பொருளை அறுதியிடும். வித்தை அகங்காரத்துக்கு உட்கருவியாய் நின்று நுகர்விற்குரிய அறிவை எழுப்பும். அராகம் மனத்துக்குஉட் கருவியாய் நின்று நுகர் பொருளில் விருப்பை எழுப்பும். அறிவிச்சை செயல் என்னும் சிவசக்திகள் சிவதத்துவங்களைச் செலுத்தும்; அவை கலைமுதலிய வற்றைச் செலுத்தும்; அவை உயிரது அறிவுஇச்சை செயல்களை எழுப்பும். அவற்றுள் அறிவு அறிபொறிகளிடத்தும், விருப்பு, அக் கருவிகள் இடத்தும், செயல் தொழிற்கருவிகளிடத்தும் நின்று பொருள்களை அறிந்து அவற்றில் அழுந்தும். இது உயிர் பொருள்களை நுகரும் முறைமையாம். விருப்பாற்றல் ஈசுவர தத்துவத்தையும், செயலாற்றல் சத்திதத்துவத்தையும், சாதாக்கிய தத்துவத்தையும், அறிவாற்றல் சிவதத்துவத்தையும் சுத்த வித்தையையும் செலுத்தும். இது சிவசத்திகள் சிவதத்துவங்களைச் செலுத்தும் முறைமையாம். நாத வடிவாகிய சிவ தத்துவம் புருடனை எழுப்பும். விந்து வடிவாய சத்தி தத்துவம் காலம், நியதி, கலை, ஆகிய மூன்றையும் எழுப்பும்; சாதாக்கிய தத்துவம் மூலப் பிரகிருதியை எழுப்பும். ஈசுவர தத்துவம் அராகத்தை எழுப்பும். சுத்த வித்தை வித்தையை எழுப்பும். இது

சிவ தத்துவங்கள் கலை முதலியவற்றைச் செலுத்தும் முறையாம். கலை உயிரது செயலையும், வித்தை உயிரது அறிவையும், அராகம் உயிரது விருப்பையும் எழுப்பும். காலம், வினை நுகர்வுக்குரிய நிலையை உண்டாக்கும்; நியதி வினைநுகர்வை வரையறுத்து நிற்கும். புருடன் விரும்பிய பொருளில் மயங்கி நிற்கும். பிரகிருதி விரும்பிய நுகர்வில் அழுத்துவிக்கும். இது கலை முதலியவைகள் உயிரது அறிவிச்சை செயல்களை எழுப்பும் முறையாம். எனவே உயிர் ஐம்புலன்களையும், ஐம்பொறி வழியறிந்து தொழிற் கருவிகள் வழி அதனைப் பற்றி, அகக் கருவிகளின் வழி அவற்றில் அழுந்தி நிற்கும் என்பது விளங்கும்.

உயிர் உணர்த்த உணருவது.

64. தனக்கென அறிவி லாதான் தான்இவை அறிந்து சாரான்
தனக்கென அறிவி லாத வாயில்தான் அறியா சாரத்
தனக்கென அறிவிலாதான் தத்துவ வன்ன ரூபன்
தனக்கென அறிவா ளுல்இச் சகலமும் நுகருந் தானே.

(தெ-ரை) தானாக எதனையும் அறிய இயலாத உயிர் தானே, இத் தத்துவங்களை அறிந்து கூடமாட்டாது. தமக்கென ஓர் அறிவில்லாதனவும், உயிர் பொருள்களை அறிதற்கு வாயிலாக இருப்பனவுமான ஐம்பொறிகள் முதலியனவும் தாமாக உயிரைக் கூட அறியா. எனவே தானாக அறிய இயலாதவனும், தான் சேர்ந்த தத்துவக் கூட்டிற்கேற்பச் சார்ந்ததன் வண்ணமாக நிற்பவனும் ஆன உயிரிடத்து, எவற்றையும் தன்னியல்பில் அறியும் இயல்புடைய சிவபெருமானே அக் கருவிகளைக் கூட்ட, அக் கருவிகளோடு கூடி நின்றுஅனைத்தையும் நுகர்வன்.

உயிரும், தத்துவக் கூட்டும், ஒன்றையொன்று அறிந்து கூடுதற்கு வாய்ப்பில்லை. எனவே இவ்விரண்டையும் இயைவித்து அதன் வழி உயிர்க்கு அருள வல்லவன் இறைவனே ஆவன் என்பது கருத்து. 'இசைத்தலும் உரிய வேறிடத்தான' என்பதனால் உயிரை ஆண் பாலாகக் கூறினர். தனக்கு என அறிவான்-தானாக எதையும் அறியும் இயல்புடையவன்: சிவபெருமான் என்பது கருத்து:

65. கண்டறி புலன்கள் காணுங் கருத்தினால் ஒருத்தன் ஞானம்
கொண்டுஉளம் அறியும் என்னில் கொள்பவன் முதலியாகும்,
மண்டிய வுணர்வு உயிர்க்கா மன்னி நின்று அறியும் என்னில்
உண்டிட வேண்டு வானுக்கு ஒருவன்வே றுண்டலாமே;

(தெ-ரை) பொறிகள் வாயிலாகக் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், உற்றும் அறியப்படும் ஐவகைப் புலன்களையும் உயிர் துணையாகக் கொண்டு அறியும். அதுபோல ஒப்பற்ற இறைவனுடைய பேரறிவைத் துணையாகக் கொண்டு உயிர் புலன்களை அறியும் என்று கூறில், அவ்வாறு அறியும் உயிரே முதன்வன் ஆவன் என்னும் குற்றம் தங்கும். சிவபரம் பொருளின் முழுமையான பேரறிவு உயிரிடத்துப் பொருந்தி நின்று உயிர்க்காக அறியும் என்றுகூறில், பசியுடையான ஒருவனுக்காகப் பிறன் ஒருவன் உண்டல் போலாம். ஆதலின் அதுவும் குற்றமாம்.

உயிர் மனத்தின் துணை கொண்டு அறிவது போல, இறைவனும் தன்நிலையில் நிற்க அவன் அருளைக் கொண்டு உயிர் அறியும் என்பர் அவிகாரவாதிகள். இவ்வாறு கூறின் முதன்மை இறைவனுக் கன்றி உயிர்க் காதலின் அதுபொருந்துவது அன்றும். உயிர்க்குச் சிற்றறிவும இல்லை; ஆதலின் இறைவனே உயிரைப் பொருந்தி நின்று உயிர்க்காக அனைத்தையும் அறிவன் என்பர் பரிணாமவாதிகள். அவ்வாறு கூறின் உண்ண வேண்டியவன் ஒருவனுக்காகப் பிறன் ஒருவன் உண்டது போல முடியுமாதலின் அதுவும் பொருந்துவ தன்றும். எனவே இறைவன் உணர்த்த உயிர் எதனையும் உணரும் என்பதே கருத்தாம்.

66. இருள்நனிஇரவி தான்வந்து இரித்தலும் இரவில் எண்ணும்
பொருள்நிலை கண்டு மாந்தர் பொருந்திடு மாறு போல
மருள் நிலை எங்கும் நீங்க மகிழ்ந்துயிர் தன்னுள் மன்னும்
அருளையும ஒழியு ஞாலத்து அறிந்த வாறுஅறியுமன்றே.

(தெ-ரை) கதிரவன் வந்து இருளை மிகவும் நீங்கிய பொழுது அவ்விரவில் காணவேண்டுமென எண்ணியிருந்த பொருள்களின் நிலையை மக்கள் கண்டு மகிழ்தல் போல, கலை முதலிய கருவிகளால் ஆணவ இருளில் கட்டுண்டு இருந்த நிலை முற்றிலும் நீங்கிய உயிர், அதுகாறும் காணாத பொருள்களை இறையருளால் கண்டு, மகிழ்ச்சியுறும், ஆயினும் இவ்வாறு தானறிதற்குத் தன்னுள் நிலை பெற்றிருக்கும் திருவருளே துணைநின்றது என்பதை மறந்து இந் நிலவுலகில் தானாக எதனையும் அறிந்ததாகக் கருதி மகிழும்.

இரவில் இருளால் எதனையும் காணமாட்டாத மாந்தர், பகலில் கதிரவன ஒளியால எதனையும் அறிவர். ஆயினும் தாம் அறிதற்குத் துணை நின்றது கதிரவன் ஒளியே என்பதை நினையார். அது போன்றே காரிட்ட ஆணவக் கருவறையுள் கண்ணிலாக் குழவியைப் போல் கட்டுண்டு இருந்த உயிர்க்குக் கலை முதலிய தத்துவக் கூட்டை வழங்கி அதனவழி உயிர் விளக்கம் பெறச் செய்கின்றனன் இறைவன். ஆனால் அவ்விளக்கத்திற்குத் துணைநின்றவன் இறைவன் என்பதை உயிர்கள் உணரவில்லை என்பது கருத்து.

நக்கீரன மற்றைய புலவர்களுக்குப் போதித்து வாழ்தல்

பின்பு நக்கீரன், தனக்கு அகத்திய முனிவர் இறைவன் அருளால் போதித்தருளிய இலக்கண நூலை மற்றைப் புலவர்களுக்கும் அன்பு மிகப் போதித்துச் சோமசுந்தரக் கடவுளின் திருவடித் தாமரைகளிலே பதிந்த பத்தியோடு இருந்தனன்.

செய்யுள்—30
ஆகச்செய்யுள்—2596

—

## 55. சங்கத்தார் கலகந் தீர்த்த படலம்

சங்கப்புலவர்கள் இறைவனிடம் தம் ஐயம் தீர்க்க வேண்டுதல்

அளவிறந்த புலமை படைத்த கடைச்சங்கப் புலவர் நாற்பத் தெண்மரும் வெவ்வேறு [1]செந்தமிழ்ப்பாக்கள் செய்து, தம்மில் செருக் குற்றுத் தங்களைத் தாங்களே நன்கு மதித்துத் தங்களுக்குள்ளே ஒருவருக்கொருவர் மாறுபட்டனர்; பின்பு தத்தம் பெருமை சிறுமை களை அளக்கவல்ல முதனூலாசிரியராகிய சோமசுந்தரக் கடவுளின் திருமுன் அடைந்து வணங்கி, ''எம்பெருமானே! அடியேங்கள் தொடுத்த இப்பாடல்களுள்ளே நன்றும் தீதும் சீர்தூக்கி அவற்றின் பெருமை சிறுமைகளை எடுத்துக் காட்டி எம்முள் எழுந்த இருமாப் பினைப் போக்கி எமது ஐயங்களைத் தீர்த்தருள்க'' என்று விண்ணப் பித்தனர்.

இறைவன் புலவராகி வந்து புலவர்களுக்கு அருளல்

மறை முதல்வனாகிய முக்கட்பெருமான் அதனைக் கேட்டளிரு அரியும் அயனும் தேடநீண்டு வளர்ந்த தீப்பிழம்பினின்றும் தோன்றி யருளிய திருவுருவம்போலச் சச்சிதானந்த வடிவாய், உலகுக்கெல்லாம் ஆதரவாய் முளைத்த மூலலிங்கத்துள் நின்றும் ஒரு புலவராய்த்

---

1. இங்கு, 'இறையனார் அகப்பொருள் உரை' என்று இறைய னார் அகப்பொருள் முதற்சூத்திர உரை கூறுகிறது.

தோன்றி வந்து, ''புலவீர்காள்! இப்பெரு நகரிலே தனபதி[1] என்னும் ஒரு வணிகன் இருக்கின்றான். அவன் மனைவி குணசாலினி என்னும் பெயரினள். அவர்கள் செய்த பெருந் தவத்தினாலே வெள்ளையறிவின ரைத் தழுவிய அறியாமையாகிய இருளை அகற்றும் ஞாயிறு போல ஒரு புதல்வன்[2] தோன்றியுள்ளான்; அவன் முருகக் கடவுளின் திருவ வதாரம்; அழகில் மன்மதனை ஒத்தவன்; ஆனால் ஊமையன். அவனி டத்துச் சென்று நீங்கள் பாடிய கவிகள் அனைத்தையும் கூறுங்கள். அவன் புத்திக்கிசைந்த பாடல் எதுவோ, அதுவே யாவராலும் நன்கு மதிக்கப்படும் பாடல்'' என்று கூறியருளினார்.

அப்போது புலவர்கள், ''எம்பெருமானே! அவன் ஊமையானால் அடியேங்களுடைய பாடலை விருப்பிக்கேட்டு நல்லன என்பதும் தீயன என்பதும் பகுத்தறிந்து அதன் தன்மை குன்றாமல் எவ்வாறு உரைப் பான்?'' என்றார்கள். அதற்குச் சிவபெருமான், ''அவ்வணிக மைந்த னாகிய ஊமைப்பிள்ளை தனக்கிசையச் சொல்லாழத்தையும் பொரு ளாழத்தையும் காணின் முடியசைத்து, மலைபோன்ற தோள் புளகித்து மனமிக மகிழ்வன்; உங்களுள் நேர்ந்த கலகமெல்லாம் நீங்கி விடும்'' என்று அருளிச் செய்துவிட்டுத் திருக்கோயிலினுட் சென்றருளினார்.

வணிக மைந்தன் மூவர் பாடலுக்குமட்டும் முடி துளக்கல்

பின்பு சங்கப் புலவர்கள் அனைவரும் சென்று வணிகர் குலமணியை [உருத்திரசருமனை] அன்போடு அழைத்துவந்து தங்கள் கழகத்தின் கண் இருத்தி வெண்மலராலும் வெண்சாந்தினாலும் பூசித்து வணங்கி அவன் திருமுன்னே கீழிருந்து தங்கள் தங்கள் பாடல்களை மொழிந்த னர். அவன் அவற்றைக் கேட்டுச் சிலருடைய சொல்லமைதியை மகிழ்ந்தான்; சிலருடைய பொருளமைதியை மகிழ்ந்தான்; சிலருடைய சொல்லமைதியை இகழ்ந்தான்; சிலருடைய பொருளமைதியை இகழ்ந்தான். சிலருடைய சொல்லின்பத்தையும் பொருளின்பத்தையும் ஒருசேரப் புகழ்ந்தான். சிலருடைய சொல்வலியையும் பொருள்வலி யையும் ஆராய்ந்தறிந்து மகிழ்வுடன் இருந்தான்; சங்கப்புலவர்கள் கவிகள் அனைத்தையும் உள்ளத்திற்கொண்டு அவற்றின் இயல்புகளை

1. இவனை, 'உப்பூரி குடிகிழார்' என இறையனார் அகப் பொருள் உரை கூறும்.

2. இவன் பெயர், 'உருத்திரசருமன்' என இறையனார் அகப் பொருள் உரை கூறுகிறது.

மெய்ப்பாட்டினாலே பகிழ்ந்துப் இகழ்ந்தப் டகழ்ந்தும் புடைப்படுத்திய வணிகச் சிறுவன், நக்கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய பாடல்களைக்கேட்டு உளங்கொண்டு உணரும்போது நுண்ணியசொல் தோறும் பொருள்தோறும் நுழைந்து அவற்றின் இனிய சுவையினை அருந்தி உடல் பூரித்தான்; ஐம்புலவுணர்வுமின்றிச் சுவை வடிவாய் மெயம்பயிர் சிலிர்த்தான்; கண்ணீர் பொழிந்தான்; சிரமசைத்துப் பெருமகிழ்ச்சியுற்றான்.

சங்கப்புலவர்கள் யாவரும் நண்பராக விளங்கல்

பல மணிகளையும் பவளங்களையும் முத்துக்களையும் நிறுத்து அளப்பவன் போலவே வணிகச் சிறுவன் [1]சொல்லாழத்தையும்[2] பொருளாழத்தையும் நாவினையே தராசாகக்கொண்டு நிறுத்துக் காட்ட நன்னெறியினை யறிந்த புலவர்கள் யாவரும் தமக்குள் உண்டான கலகத்தை விடுத்து நட்புப் பூண்டனர்.

பல்காசொடு கடலிற்படு பவளஞ்சுடர் தரளம்
எல்லாநிறுத்[து] அளப்பானென இயல்வாணிகக் குமரன்
சொல்லாழமும் பொருளாழமும் துலைநாவெனத் தூக்க
நல்லாறறிபுலவோர்களும் நட்டார்இகல் விட்டார்

நக்கீரன், கபிலன், பரணன் என்னும் மூவருடைய பாடல்கள் திலகமாய்ச் சிறந்தோங்கின. பின்னர்த் தெய்வப் புலவர்கள் குற்ற மற்ற நூல்களை ஆராய்ச்சி செய்து சிறப்புடன் விளங்கினர்.

செய்யுள்—14

ஆகச்செய்யுள் — 2610

## 56. இடைக்காடன் பிணக்குத் தீர்த்த படலம்

குலேச பாண்டியன் தன்மை

இந்திரன் பழியை நீக்கி அவனுக்கு அரசுரிமையையும் நற்பேற்றையும் அளித்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகட்கு அன்பு கூர்ந்து சண்பக மாலை தொடுத்துச் சாத்தி வழிபாடு செய்த சண்பக மாறன் சிவபதம் அடைந்த பின்பு, பிரதாப சூரியன், வங்கிசத் துவ

1. சொல்லாழம்-சொற்சுவை: குணம், அலங்காரம் என்பன
2. பொருளாழம்-பொருட் சுவை; நகை அழுகை முதலியன.

சனன், இரிபு மருத்தனன், சோழ வங்கிசாந்தகன், சேரவங்கி சாந்த கன், பாண்டி வங்கிசேசன். வங்கிச சிரோன்மணி, பாண்டீச்சுரன், குலத்துவசன், வங்கிச பூடணன், சோம சூடாமணி, குலசூடாமணி. இராச சூடாமணி, பூப சூடாமணி, குலேசன் என்னும் பதினைந்து பாண்டியர்கள் வழிவழி வந்து பிறந்து பாண்டிநாட்டை அரசுசெய் தனர். இவர்களுள்ளே குலேச பாண்டியன் அரசரில் சிறந்தவன்; இலக் கண இலக்கியங்களின் வரம்பு கண்டவன்; எத்தகைய பெருநூலையும் இனிது அறிந்தவன். அதனால் முத்தமிழ்ப்புலவர் இருக்கும் சங்கப் பலகை அவனுக்குஇடங்கொடுத்தது.

குலேசன கல்விச் செருக்கால் இடைக்காடனை அவமதித்தல்

குலேச பாண்டியன், கல்வியில் மிகச் சிறந்தவன் எனக்கேள்வி யுற்றுக் கலைகள் முற்றுமுணர்ந்த கபிலனிடத்துப்பேரன்புமிக்க நண்ப னாகிய [1] இடைக்காட்டுப் புலவன், ''ஒருதமிழ்ப் பிரபந்தம் பாடிச்சென்று அரசனைக் காண்போம்'' என்று கருதி. இயற்றிய நூலுடன் சென்று அப் பாண்டியனைக் கண்டு, தான் இயற்றிய உரையமைந்த பனுவலை வாசித்தான். அப்பொழுது சொற்சுவையும் பொருட்சுவையும் பாகு படுத்தி நுகரவல்ல குலேச பாண்டியன் மனத்தின்கண் உள்ள பொறா மையினாலே முடியை அசைக்காமலும் அகமகிழ்ச்சியை முகத்தின்கண் சிறிதும் மலர்ந்து காட்டாமலும் யாதொன்றும் உரையாமலும் வாளாவிருந்தான். கற்றோரால் விரும்பப்பெற்ற நட்பினையுடைய இடைக்காடன், தன்னை மானமானது வெளியே தள்ளச் சென்று திருக்கோயிலை அடைந்தான்.

இடைக்காடன் இறைவனிடம் முறையிடல்

இடைக்காடன் சோமசுந்தரக் கடவுள் திருமுன் வீழ்ந்து வணங்கி எழுந்து, ''திருவாலவாயுடைய நாயகனே! தமிழறியும் பெருமானே! அடைந்தோர்க்கு நல்லநிதியே! பாண்டியன் செல்வப் பொருள்போல அளவிறந்த கல்விப் பொருளும் மிக்குடையவன் என்று கேள்வியுற்றுச் சொற்சுவை நிறைந்தகவி பாடிக்கொண்டு அவனிடம் சென்றேன்; சிறிதும் தலைஅசைக்காமல் அவமதித்தான்; எந்தையே! இனிய கவி தொடுத்து வருணித்த புலவர்களுக்கு மனமகிழ்ந்து ஒரு பயனும் கொடாத பெரிய கடலும், உப்பங்கழியும், விலங்கும், பறவையும், மரமும், மலையும், கொடிய பாலைநிலமுமாகிய அஃறிணைப் பொருள்

1. இப் புலவன் ஊர் மதுரைக்குக் கிழக்கேயுள்ளதாகிய 'இடைக் காட்டூர்' என்று கூறுகின்றனர்.

களுள் ஒன்றைப் போல இருந்தான். அவன் அடியேனையோ இகழ்ந் தான்; இல்லை. சொல்லின் வடிவமாகிய உமாதேவியாரையும் அச் சொல்லின் பொருளான உம்மையுமே இகழ்ந்தனன்; அதனால் எனக்கு வந்த குறை யாது?

> என்னையிகழ்ந் தனனோ? சொல் வடிவாய் நின்
> னிடம்பிரியா இமையப் பாவை
> தன்னையுஞ்சொற் பொருளான உன்னையுமே
> இகழ்ந்தனன்: என் தனக்கியாது? (என்று) ..

என்று திருமுன்நின்று விண்ணப்பஞ் செய்துவிட்டுத் தணியாத கோபம் இழுப்ப வடதிசை நோக்கிச் சென்றான்.

சிவபெருமான் இடைக்காடன் பின் போதல்

இடைக்காடன் கூறிய அச் சொற்கள் திருச்செவியில் வேற்படை போலச் சென்று தைக்கக் கருணை வடிவினனாகிய சோமசுந்தரக் கடவுள், வெளியேறிய இடைக்காடனுக்கும் அவன் உயிர் நண்பனாகிய கபிலனுக்கும் மனமகிழ்ச்சி உண்டாகும் பொருட்டு ஞானமயமாகிய தம்முடைய இலிங்க வடிவத்தை மறைத்து உமாதேவியாரோடும் எழுந்து புறம் போந்து தமது திருக்கோயிலுக்கு நேர் வடக்கே வையையாற்றின் தென் பக்கத்தே ஒரு [1] திருக்கோயிலை ஆக்கி அதன் கண் இனிதாக அமர்ந்தருளினார். சங்கப் புலவர்களும் ஒருசேர எழுந்து சிவபெருமான் போனவழியே போய் அங்குத் தங்கினர்.

அடியார்கள் பாண்டியனிடம் நகர் பொலிவிழந்ததைக் கூறல்

அந்நாளின் பின்னாள் இராப்பொழுது புலர வரும் வைகறையிலே, திருப்பள்ளியெழுச்சிக் காலத்திலே இறைவனைச்சேவிக்க வந்த சிவனடியார்கள் திருக்கோயிலிலே சிவலிங்கத் திருவுருவத்தைக் காணாது, ''இஃது என்ன அதிசயமோ?'' என்று ஐயுற்று வருந்தி, ''இதனை விரைந்து சென்று அரசனுக்கு அறிவித்தல் வேண்டும்'' என்று புறப் பட்டு வரும்பொழுது, உயிர்க்காதலரைப் பிரிந்து வாழும் பெண்கள்போலவும் இலக்குமியை நீத்த தாமரை மலர் போலவும் பொலிவழிந்து நிற்கும் மதுரை மாநகரத்தினைக் கண்டனர்; உடனே பாண்டியனிடத்துச் சென்று மன நடுநடுங்கி நாவுலர்ந்து, ''அரசே! நாங்கள் ஒரு செய்தியை இங்குச்

---

1, இத் திருக்கோயில் 'வட திருவாலவாய்' எனப் பெயர் பெறும்; இக் கோயில் தற்போது பழைய சொக்கநாதர் கோயில் என வழங்குகின்றது.

சொல்ல அஞ்சுகின்றோம்; தங்கள் தலைவராகிய சோமசுந்தரக் கடவுளைத் திருப்பள்ளியெழுச்சியிலே தரிசிக்கச் சென்றோம்; இன்று அவ்விடத்தில் சிவலிங்கத் திருமேனியைக் காணோம்; மதுரை மாநகரமும் பொலிவழிந்தது'' என்றார்கள்.

குலேச பாண்டியன் புலம்பி வருந்துதல்

அம் மொழி அக்கினியிற் காய்ச்சிய வேல்போலப் பாண்டியனுடைய செவியிற் புகுதலும், உடனே அவன் வேரற்று வீழ்ந்த ஆலமரம் போல் சிங்காதனத்தினின்றும் மண்மேல் உடலின்கண் வடுப்பட விழ்ந்து, உயிரொடுங்க, அறிவு ஒடுங்கிப் பாவை கிடந்தாற் போலச் சிறிது பொழுது கிடந்து, அறிவு சிறிது வர எழுந்து, அஞ்சலியாக இருகைகளையுஞ் சிரமீது கூப்பிஅழுது கண்ணீர் வெள்ளத்து மூழ்கி, ''எம்பெருமானே! எம்பெருமானே! அடியேன் என்ன தவறு செய்தேன்; திரிபுரம் பொடியாகுமாறு வளைத்த மேருவாகிய வில்லை உடையோய்! நீபழைய சிவலோகத்தின்கண் உள்ளாயோ? திருக் கயிலாசமலையின்கண் உள்ளாயோ? மெய்யடியாரது மனத்தின்கண் உள்ளாயோ? மறை முடியின்கண் உள்ளாயோ? இவற்றுள் எங்குச் சென்றாய்? எங்குச் சென்றாய்?'' என்று சொல்லித் தளர்தலுற்றான்

வழுதி வையைத் தென் கரையில் இறைவனைத் தரிசித்தல்

அப்பொழுது சிலர் பாண்டியனிடம் ஓடிவந்து, ''அரசே நாங்கள் ஒரு அதிசயங் கண்டோம்; வையையாற்றின் தென் கரையிலே-நான்முகன் இவ்வுலகைப் படைத்த நாள் முதல் ஒரு காலத்திலேனும் காணாத காட்சி!-சங்கப் புலவர்களோடும் மீனாட்சியம்மையாரோடும் சோமசுந்தரக் கடவுள் வந்து எழுந்தருளியிருக்கின்றார்'' என்று கூறினர். அச் சொல் தன் செவியிலே நுழைந்து புகுந்து இழுக்கப் பாண்டியன் எழுந்து அச்சத்தோடு விரைந்து நடந்து சென்று, வையை தன் திரைக் கையாலே நறுமலரைத்தூவி வணங்க அதன் தென் கரையிலே மீனாட்சியம்மையாரோடும் வந்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்டான்; விரைந்து திருமுன் சென்று வணங்கிக் கண்ணீர் சொரிந்து பேரானந்தக் கடலுள் அழுந்திக் கிடந்து பின் எழுந்து நாக்குழறித் தடுமாறி நின்று, ''ஐயனே! ஐயனே !வேதங்களும் தொடர்ந்து அறியாத திருவடிகள் சிவக்க, நகரம் பொலிவழிய உலக மாதாவோடும் இங்கு வந்து எழுந்தருளியிருக்கும் காரணம் யாது? அடியேனால் ஏதேனும் தவறு ஏற்பட்டதோ! அடியேனுடைய பரிசனங்களாலாயினும், பகைவராலாயினும், கள்வராலாயினும், விலங்கு முதலியவற்றாலாயினும்

இத்தமிழ்நாட்டின் கண் இடையூறு நேர்ந்ததோ! வேதியர்கள் தம் ஒழுக்கங் குன்றினர்களோ! தவமும் தருமமும் குறைந்தனவோ! இல்லறமும் துறவறமும் தத்தம் நெறியினின்றும் தவறினவோ! எந்தாய்! அடியேன் நிகழ்ந்தது யாதென அறியேன்'' என்று விண்ணப்பஞ் செய்து கொண்டு

கள்ளேறு கடுக்கைநறுஞ் சடையானே!
போற்றி! பெருங்கருணை! போற்றி!
வெள்ளேறு கொடியுயர்த்த விடையானே!
போற்றி! அருள்விகிர்தா! போற்றி!
புள்ளேறு கொடியுயர்த்த புனிதன்அயன்
தேருத புனிதா! போற்றி!
வள்ளேறு சிறுகுழவி மதிநுதல்அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

பாதமலர் இணைபோற்றி! பன்னிரண்டு
கையானைப் பயந்தாய்! போற்றி!
வேதமுடி கடந்தபர ஞானத்தில்
ஆனந்த விளைவே! போற்றி!
போதவடி வாய்நால்வர்க்(கு) அசைவிறந்து
நிறைந்தபரம் பொருளே! போற்றி!
மாதவள நீறணிந்த மன்னா! அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

பொக்கமுடை யார்செய்யும் பூசைதவங்
கண்டுநகும் புராண! போற்றி!
தக்கன்மகம் பொடியாகத் திருப்புருவம்
நெறித்தகொடுந் தழலே! போற்றி!
செக்கமலக் கண்ணிடந்த கண்ணனுக்குத்
திகிரியருள் செல்வா!போற்றி!
மைக்குவளை அனையமணி கண்டா! அங்
கயற்கண்ணி மணாள! போற்றி!

எனத் துதித்து வணங்கினான்.

இறைவன் பாண்டியனுக்கு அசரீரியாக மொழிதல்

அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் ''வையை நாடனே! உனது [1]சோத்தம் நாம் கேட்டு மகிழ்ந்தோம். அஃது எமக்கு இனிமை

1. சோத்தம் - இழிந்தார் செய்யும் அஞ்சலி; இங்குத் துதியை உணர்த்திற்று.

யுடையதாயிற்று; இன்னும் உனக்குக் கூறவேண்டியது ஒன்று உண்டு; அதனைக் கேட்பாயாக: தலங்கள் பலவற்றுள்ளும் திருவாலவாயே உயர்ந்தது; இங்கே அளவிறந்த சுயம்புலிங்கங்கள் உள்ளன; அசுரர்களும், இயக்கர்களும், சித்தர்களும், இராக்கதர்களும், தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும், தாபித்து வழிபட்ட இலிங்கங்களும் பல உள்ளன; அவ்விலிங்கங்களுள்ளே அறுபத்து நான்கு உயர்ந்தன; அவற்றுள்ளும் எட்டு உயர்ந்தன; அவ் வெட்டும் இந்திரன் முதலிய அட்ட திக்குப் பாலகர்களாலே பூசிக்கப்பட்டவை; இவ்வெட்டினுள் நாம் வந்து எழுந்தருளியிருக்கும் இலிங்கம், [1] நமது தோழனாகிய குபேரன் பூசித்த இலிங்கம் ஆகும்; மேற்கூறிய இலிங்கங்கள் உள்ள இடம் அனைத்தும் ஒருழிக் காலத்தில் மறைந்தன; இது நம் தோழன் கண்டு வழிபட்ட இலிங்கமாதலால் நாம் இங்கே வந்து உறைந்தருளினோம்; ஆகையால், இத் தெய்வத்தானம் இன்று முதல் 'வட திருவாலவாய்' எனச் சிறப்புறும்; நாம் கடம்ப வனத்தை விட்டு ஒரு பொழுதாயினும் நீங்கியிருப்போமல்லோம்; நீயும் வேறு தீங்குடையை அல்லை; இடைக்காடன் செய்த செய்யுளை இகழ்ந்தாய்; அப்பொழுதே நாம் அவனிடத்து வைத்த அருளினால் இங்கு வந்தோம்'' என்று ஆகாயத்தில் அசரீரி வாக்கினால் அருளிச்செய்தார்.

பாண்டியன் அது கேட்டு. ''தேவர்களின் புண்ணியனே! சிறியோர் செய்த குற்றத்தைப் பொறுத்தருளுவது பெரியோர்க்குப் பெருமையன்றோ?'' [2] என்று சொல்லி வணங்கினான். அப்பொழுது சோமசுந்தரக் கடவுள் குலேச பாண்டியனுக்கு அருள் சுரந்து அரண்மனைக்கு ஏகவிடுத்துத் தாம் மீனாட்சியம்மையாரோடும் உடன் உறைந்த சங்கப் புலவர்களோடும் தம் திருக்கோயிலுட் புகுந் தருளினார்.

---

1. இங்கு, ''*தனதனற்றோழா! சங்கரா! சூலபாணியே*'' என வரும் திருமாளிகைத் தேவர் திருவிசைப்பா அடி கருதற்பாலது.

2. இங்கே, ''வெறுப்பனவே செய்யுமென் சிறுமையை நின் பெருமையினாற் பொறுப்பவனே'' (அடைக்கலப்பத்து) எனவும், ''பொறுப்பரன்றே பெரியோர் சிறு நாய் கடம் பொய்யினையே'' எனவும் வரும் திருவாசக அடிகள் சிந்திக்கற்பாலன.

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி
திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி:- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் - Pin 612 504